# நூல் அறிமுகம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : நலம் தரும் திருத்தலம் -1 |
| நூல் ஆசிரியர் | : விசு அய்யர் |
| எழுத்து | : 11 புள்ளி |
| முதற் பதிப்பு | : 2023 |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| கணினி அச்சு உதவி | : மணி பதிப்பகம் |
| பக்கம் | : **62** |
| மதிப்பு | : இந்திய ரூபாயில் ரூ.60 |

# வாழ்த்துரை

திரு விசு அய்யர் அவர்கள் கைவண்ணத்தில் சிந்தையில் பிறந்த இன்னொரு படைப்பு நலம் தரும் திருத்தலம். இது தொடர் கட்டுரையாக பால சோதிடம் வார இதழில் வெளியானதின் தொகுப்பு தான் இந்த நூல்.



**R. Manikandan,** B.Com.
Treasurer, arulalayam

வழக்கம் போல தொடர்ந்து தனது நூலுக்கு தொடர்ந்து மதிப்புரை வழங்க என்னக்கு வாய்ப்பு தந்து வருகிறார் இந்தநூல் ஆசிரியர். அவருக்கு எனது மனம் நிறைந்த நன்றிகள்.

ஒரு நூலை படைப்பது என்பது அத்தனை சுலபமானது அல்ல. சிந்தனைகளை திரட்டி, அதை சுவை பட எழுதி, படிப்பவர்கள் ரசனை குறையாமல் தர வேண்டும் என்பதில் ஒவ்வொரு எழுத்திலும் எண்ணங்களை ஊடுருவி, ஒரு நூலாக கட்டமைப்பது ஒரு பெரிய முயற்சி தான். அந்த முயற்சியில் தொடந்து புத்தகங்களை படைத்து தரும் விசு அய்யர் அவர்களின் சீரிய முயற்சி பாராட்டுக்குரியது.

வழிபாடு என்பது நமது சமய ஒழுக்கம் ஆனால் அதையும் கலையாக காசு பார்த்துக் கொண்டு இருக்கும் இன்றைய சூழலில், மக்கள் நலன் ஒன்றினிலே தன் எண்ணத்தை பதித்து நலம் தரும் திருத்தலம் என்ற தலைப்பில் சோதிட சிந்தனைகளை சேர்த்து வழிபாட்டுத் திருத்தலங்களை அடையாளம் காட்டி, இறைவழிபாடு செய்ய தூண்டும் இந்த புத்தகம் மக்கள் மத்தியில்நிச்சயம் வரவேற்பை பெறும் என உறுதியாக நம்புகிறேன்.

ஒரு சோதிட குழுவில், தற்செயலாக இந்த நூல் ஆசிரியரை சந்தித்து அவர் தம் சோதிட சிந்தனைகளையும், ஆய்வு குறிப்புகளையும் படித்து ரசித்து பழகியவன் என்பதுடன் தொடர்ந்து ஆசிரியரின் இன்ன பிற புத்தகங்களுக்கு வாழ்த்துரை தந்து உள்ளேன் என்பதில் உவகையுடன் மகிழ்ச்சி கொள்கிறேன்.

இந்த புத்தகம் தொகுப்பு நூலாக வந்துள்ளமையால், அதனை ஆன்மிக அன்பர்கள் வாங்கி படித்து இன்புற வேண்டும் என மெத்த பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த நூல் ஆசிரியர் ஊக்கம் குறையாமல் மேலும் பல நூல்களை படைக்க வேண்டும் என எனது விருப்பத்தை பதிவு செய்கிறேன்.

இந்த புத்தகத்தை வாங்கி படித்து, சிந்தனைகளை வளர்த்து, பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்..

உங்கள்

**மணிகண்டன்**

maniiyer73@gmail.com

# என்னுரை

காசு கொடுத்தால் கடவுளை காட்டுவேன் என்று ஒரு போலியான மத தலைவர் போர்வையில் சிலர், எத்தனை காசு வேண்டுமானாலும் தருகிறேன், இந்த பிரச்சனையில் இருந்து விடுதலை பெற்று தாருங்கள் என மக்கள் கூட்டம் இவர்களுக்கு மத்தியில் ஒழுக்கமான வழிபாட்டு முறைகளை எடுத்துச் சொன்னாலும் ஏற்றுக் கொள்ளாத அறியாமையில் சிலர் என நல்லதை ஏற்க தயங்கும் மக்களின் நடுவே, அடிப்படையான சில சோதிட குறிப்புகளை தந்து வழிபாட்டின் நோக்கமே, வாழ்வில் சிக்கல் இல்லாமல் வாழும் முறை தான் என எடுத்துச் சொல்ல வந்தது தான் உங்கள் கையில் தவழும் "நலம் தரும் திருத்தலம்" என்ற இந்த புத்தகம்.

நலம் தரும் திருத்தலம் என்ற தொடர் பால சோதிடம் வார இதழிலில், தொடர் கட்டுரையாக வந்த பதிப்பின் தொகுப்பே இந்த நூல். இந்த நூலில் ஒவ்வொரு கட்டுரையிலும் ஒரு திருத்தல சிறப்பை சொல்லி அதற்கேற்ப சோதிட குறிப்புகளையும் சொல்லி, மக்கள் மத்தியில் நம்பிக்கை ஏற்படுத்தி, இறை வழிபாட்டில் அழைத்து செல்வது தான் இந்த புத்தகத்தின் நோக்கமாக இருக்கும்.

பிரசித்தி பெற்ற கோவில்கள் தான் பலன் தருவன என்ற மக்கள் மத்தியில் உலாவும் எண்ணங்களை களையவும், தெய்வ சாநித்தியமும் அதிகம் அறிமுகம் இல்லாத நலம் தரக் கூடிய கோவில்களை மக்களுக்கு அடையாளம் காட்டுவதற்காகவும் இந்த புத்தகம் மலர்ந்து உள்ளது.

இது தொடராக வந்து கொண்டு இருப்பதால், படிப்பவர்களின் ஆர்வம் குறையாமல் இருப்பதற்கும், சோர்வு இல்லாமல் படிப்பதற்கும் 60 பக்கங்கள் கொண்ட புத்தகமாக படைத்து தந்து இருக்கிறோம்.

"நலம் தரும் திருத்தலம் பகுதி 1" என்ற இந்த நூலினை வழக்கம் போல கணினி அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த **மணிபதிப்பகத்தாரு**க்கு நன்றியை பதிவு செய்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்கு வாழ்த்துரை தந்த **அருளாலயம் அமைப்பின் பொருளாளர் திரு மணிகண்டன் அய்யர் அவர்களுக்கு** மனம் நெகிழ்ந்த நன்றியையும் பாராட்டுதல்களையும் பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு ,மைல் கல் என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும். இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

# “நலம் தரும் திருத்தலம்....”

# - 01 -

“ஆலயம் தொழுவது சாலவும் நன்று” என்பது தமிழ் கிழவியின் கூற்று.. ஆனாலும் இன்றைய நாளில், அருகாமையில் இருக்கும் கோவிலுக்கே பிரதோஷம், கிருத்திகை வெள்ளிக்கிழமை என சில நாட்களுக்கு மட்டுமே அதுவும் சிலர் தான் கோவிலுக்கு போகிறார்கள்.

வாழ்நாள் முழுவதும் திருத்தல யாத்திரை செய்வது நமது அடிப்படை கடமை என்பதை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ள வேண்டும். திருக்ஷேத்திர கோவை பாடிய அப்பர் சுவாமிகள் தேவாரத்தில் ஒரு பாட்டில் எத்தனை திருத்தலம் பட்டியலிடப்பட்டு இருக்கும் என படித்து பார்த்தால், இத்தனை தல யாத்திரை செய்ய முடியுமா என்ற வியப்பு நமக்கு ஏற்படும்.

இன்றைய அவசர உலகில், வாழ்வாதாரமே போராட்டமாக இருக்கும் போது, தல யாத்திரைக்கு நேரம் இல்லை அல்லது பொருளாதார சூழல் இல்லை டிஜிட்டல் டெக்னாலஜிக்கு அடிமை என பல காரணங்களை சொன்னாலும், நேரில் சென்று தலயாத்திரை செய்ய முடியாதவர்களுக்காக, அதிகம் பழக்கத்தில் இல்லாத அரிய நலன்களை தரும் ஆலயங்களை தொகுத்து வாரம் ஒரு திருத்தலம் என பதிவு செய்ய எண்ணம் வந்தது.

அந்த வகையில் இந்த வாரம் முதல் நலம் தரும் திருத்தலங்கள் என்ற தொடரில் வாரம் ஒரு திருத்தலம் பதிவாகும். வழக்கம் போல அன்பர்கள் ஆக்கமும் ஊக்கமும் தந்து, பால சோதிட வாசகர்களின் எண்ணிக்கையை உயர்த்தி பிடிக்க வேண்டுகிறோம்.

இந்த வாரத்தில், வாசகர்களை பாண்டிய நாட்டிற்கு அழைத்து சொல்ல போகிறேன்.

கோவில்கள் இல்லாத ஊரில் குடி இருக்க வேண்டாம் என்று பொதுவான சொல்லடை இருந்தாலும், தமிழகத்தில் தான் கோவில்களும் அதன் சிறப்புகளும் நிறைந்து இருக்கிறது. தலம், தீர்த்தம் மூர்த்தி என்ற சிறப்பு அத்துடன் சைவ திருக்கோயிலாக இருந்தால், பாடல் பெற்ற திருத்தலம், அல்லது வைப்பு தலம், என்றும், வைணவ கோவில் என்றால்

மங்களாசாசனம் செய்யப்பட்டது போன்ற சிறப்பும் அந்தெந்த திருத்தலத்திற்கு உண்டு.

திருஞானசம்பந்தரால், தேவாரம் பாடல் பெற்ற பாண்டிய நாட்டு திருத்தலம், பிரான்மலை என இன்றைய நாளில் அழைக்கப்படும் கொடுங்குன்றம்.

இன்றைய நாளில் தேய்பிறை அஷ்டமியில் பைரவ வழிபாடு செய்கிறார்கள். அதேபோல தேய்பிறை பஞ்சமியில் வாராஹி வழிபாடும் உண்டு யார் இதை செய்ய வேண்டும்? எப்போது செய்ய வேண்டும் என்ற குறிப்புகளை இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இந்த பைரவ வழிபாட்டின் முதல் தொடக்கமே இந்த திருக்கோயிலில் இருந்து தான் என்றால் வியப்பாக இருக்கும். இந்த திருத்தலத்தில், மூன்று அடுக்கு என்ற நிலையில் சுவாமி அருள்பாலிக்கிறார். அதில் நடுவில் உள்ள மலையில் பைரவர் சன்னதியும் உள்ளது இங்கு பைரவருக்கு சிறப்பு வழிபாடு உண்டு.

ஜாதகத்தில் ஆறாம் பாவம் பழுது பட்டு இருப்பவர்கள், தோல் நோயினால் அவஸ்தை படுபவர்கள் இங்கே பைரவருக்கு உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் வழிகாட்டுதலின் படி வழிபாடு செய்தால் ஆறாம் பாவகத்தின் பழுது களையப்படும் என்பது கண்கூடு.

இந்த திருக்கோயிலின் இன்னொரு சிறப்பு தெரியுமா? எல்லா சிவன் கோவிலிலும் நந்தி நிச்சயம் இருக்கும் என்பது உங்களுக்கு சொல்லாமலே தெரியும். அதுவும் நந்தியின் காதில் எதையோ சொல்வது என செய்ய கூடாததை பலர் செய்து கொண்டு இருப்பதும் தெரிந்து இருக்கும்.

ஆனால் இந்த கொடுங்குன்றம் திருக்கோயிலில் சுவாமிக்கு எதிரே நந்தி இருக்காது. திருக்கயிலாயம் எனும் மேல் அடுக்கு கோவிலில் அகத்தியருக்கு திருமண காட்சியை கொடுத்த போது, நந்திதேவர் மத்தளம் வாசித்து கொண்டு இருந்ததால், நந்தி இல்லை என்று சொல்லுவார்கள். இதே போல இங்கே கொடிமரமும் இல்லை. பலி பீடமும் இல்லை. அஷ்டபந்தனமும் இல்லை. சுவாமிக்கு அபிஷேகமும் கிடையாது.

இத்தலத்தில் சுவாமி யோக நிலையில் காட்சி தருவதால், புனுகு மட்டும் சார்த்துவார்கள், அபிஷேகம் கிடையாது. அதுவும் தினமும் ஒரு

புத்தாடை. தான். ஒருமுறை சாற்றிய ஆடைகளை மீண்டும் சார்த்துவது இல்லை.

முதலும் முடிவும் இல்லாத இறைவன் என சுயம்புவாக அமைந்த இந்த திருத்தலத்தில், தட்சிணாயன புன்னியகாலத்தின் கடைசி மூன்று மாதமான ஐப்பசி தொடங்கி, உத்திராயான புன்னியகாலத்தின் முதல் மூன்று மாதமான பங்குனி வரையில் சூரிய ஒளி சுவாமி மீது விழுவது அதிசயங்களில் ஒன்றாக போற்றப்படுகிறது. தட்சிணாயனம் என்பது, ஆடிமுதல், மார்கழி வரையில். உத்திராயானம் என்பது தை முதல் ஆனி வரையில். எனபது உங்களுக்கு தெரிந்து இருக்கும்.

திருஞானசம்பந்தர், தொலைவில் இருந்து மலையை தரிசித்து, “எம்பிரான் மலை” என சொல்லி பதிகம் பாடியதால் பிரான்மலை என்று அழைப்பதாக சொல்கிறார்கள்.

ஜாதகத்தில் குடும்ப ஸ்தானமான இரண்டாம் இடம் சர்ப்பம் மற்றும் அசுப கிரகங்களால் பழுது பட்டு இருந்தால், இந்த தலமே பரிகார தலமாக அமையும். மன முறிவு, கருத்து வேறுபாடு, தொழில் அல்லது வேலை நிமித்தம் குடும்பத்தை பிரிந்து இருத்தல் போன்ற சூழலில் இருப்பவர்கள், அவரவர்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர்கள் ஆலோசனைப்படி வழிபாட்டு முறைகளை இந்த திருத்தலத்தில் செய்து வித்தால், உறுதியான பலன் கிடைக்கும்.

ஒவ்வொரு திருத்தலத்திலும் ஒரு சிறப்பு உண்டு. அந்த வகையில் பொதுவாக பாண்டிய நாட்டு திருத்தலங்களில் கேட்டது கிடைக்கும். முறையாக கேட்டால் நிச்சயம் அது கிடைக்கும் என்பதை அவரவர்கள் அனுபவத்தில் உணர முடியும்.

முருகு என்றால் அழகு என சொல்லுவார்கள். அதே அழகுடன் இங்குள்ள திருமுருகப் பெருமான் வயோதிக கோலத்தில் இருந்து அருள்பாலிக்கிறார். திருப்புகழ் பாடல் பெற்ற திருப்பதிகம் என்ற சிறப்பை பெறும் இந்த திருத்தலத்திற்கு வாழ் நாளில் ஒரு முறையேனும் சென்று வர வேண்டும் என உறுதி எடுத்துக் கொள்ளுங்கள். வழக்கமாக இருக்கும் முருகன் சன்னதிக்கு முன் இருக்கும் மயில் வாகனம் இங்கு இருக்காது. யானை வாகனம் தான் இருக்கும். இதற்கு புராண காரணங்கள் இருந்தாலும் இருக்கும் நிலையில் போற்றி வணங்க நம்மை பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.

வாரி வழங்கும் பாரி வள்ளல், ஆட்சி செய்த இடம் இந்த பகுதி, சிவகங்கை மாவட்டத்தில், ஜல்லிக்கட்டு சிறப்பாக நடக்கும் சிங்கம்புணரி என்ற ஊருக்கு அருகில் உள்ளது. திருப்பத்தூரில் இருந்து சுமார் 20 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள இந்த திருத்தலத்தில் உள்ள மணி இருக்கும். ஒலி 40 கிலோமீட்டர் சுற்றளவுக்கு சப்தமாக ஒலிக்க கூடியது என்றால் மனதில் மணியோசை கேட்கும் உணர்வு ஏற்படுகிறதா?

முல்லைக்கு தேர் கொடுத்த பாரிக்காக விழா இந்த திருக்கோயிலில் நடைபெறுகிறது. அந்த சிற்பமே இந்த திருக்கோயிலில் இருக்கிறது.

இந்த திருக்கோயில் மலைப்பகுதியில் உள்ள மரம் என்ன மரம் என்றே இன்றுவரை இயற்கை ஆர்வலர்களால் கூட கண்டு பிடிக்க முடியவில்லை என்பது இத் திருத்தலத்தின் இன்னொரு சிறப்பு.

தேனாம்பிகை உடனாய கொடுங்குன்றநாதரை இந்த ஆண்டே தரிசனம் செய்வோம் என உறுதி எடுத்தக் கொள்வோம். இன்னொரு திருத்தல சிறப்புடன் அடுத்த வாரம் தொடர்கிறோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

-

# - 02 -

நோய் இல்லாத வாழ்வினால் வாழ வேண்டும் என்று தான் எல்லோரும் நினைப்போம். இல்லையா..விரும்பியோ, விரும்பாமலோ, கோரனாவுக்கு பிறகு இந்த எண்ணம் எல்லோருக்கும் இல்லாமல் இல்லை. மருத்துவ காப்பீடு எடுப்பதும் வீட்டுக்கு ஒரு குடும்ப மருத்துவரை வைத்துக் கொள்வதும் இன்றைய நாளில் தேவையாகி போய் விட்டது.

ஜோதிடத்தில் 6ம் பாவகத்தை நோய் பற்றி குறிக்க சொல்லுவார்கள். 6ம் பாவகம் என்பது ஜாதகத்தில் “ல” என்று போட்டு இருக்கும் கட்டத்தில் இருந்து கடிகார சுற்றில் எண்ணி வரும் போது, வரும் ஆறாவது கட்டம் என சோதிட ஆர்வலர்களுக்கு தெரிந்து இருக்கும்.

எந்த ஒரு பாவகத்திற்கும் அதன் பன்னிரெண்டாம் பாவகம் தான் நிவர்த்தி பாவகம் என சோதிடத்தில் சொல்லுவார்கள். இந்த 6ம் பாவகத்திற்கு 12ம் இடம் பூர்வ ஜென்ம பலனை குறித்து சொல்லும் 5ம் பாவகம் தான் என்பது சோதிட அன்பர்களுக்கு தெரிந்து இருக்கும். அந்த வகையில் பூர்வ ஜென்ம பலன் கிடைத்தால் மட்டுமே இந்த ஊத்துமலை திருத்தல தரிசனம் கிடைக்கும் என்பது ஐதீகம்.

அகத்திய மாமுனிவர் ஸ்ரீ சக்ரம் அமைத்த இந்த ஊத்துமலை பாலசுப்பிரமணியர் திருக்கோயில், மருத்துவ குணங்கனால் கொண்ட சுனைகளும் அரிய வகை மூலிகையாலும் நிரம்பிய திருத்தலம்.

சுமார் 2000 ஆண்டுகள் பழமை வாய்ந்த சித்த பெருமானார் வழிபட்டு அருள் பெற்ற இந்த ஊத்துமலை முருகனை தரிசித்து வழிபடுவோருக்கு நினைத்தது நினைத்தபடியே நிறைவேறுவதாக பக்தர்களிடம் இன்றும் நம்பிக்கை உண்டு.

ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி நாட்களில் பதினெண் சித்தர்களுக்கு இங்கே சிறப்பு பூஜை செய்யப்படும் இந்த கோவிலின் ஸ்ரீசக்ர தரிசனம் வாழ்வில் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வ வளத்தை நிலைக்க செய்யும்.

கருணை பொழியும் அழகு திருமுகத்துடன், நின்ற திருக்கோலத்தில், மயில் வாகனத்துடன் அருள்பாலிக்கும் முருகப் பெருமான், சந்நிதியில்

உள்ள பாறையில் நீரூற்று வருவதால் ஊத்துமலை என்று பெயர் என சொல்கிறார்கள்.

குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்று சொல்லும்படி இந்த ஊத்துமலை முருகன் கோயில் மூன்று நிலைகளை கொண்டதாக அமைந்து உள்ளது. இம் மலையை சுற்றி ஸ்கந்தகிரி, நாமகிரி, குமரகிரி, பத்மகிரி என மலை வளம் நிறைந்த இந்த ஸ்தலம், நோய் தீர்க்கும் அற்புத தலமாக அமைந்து உள்ளது.

இன்றைய நாளில் சர்வ சாதரணமாகி விட்ட இரத்த குழாய் அடைப்பு போன்ற இதய நோயும், உயர் ரத்த அழுத்த நோயும் குணமடைய வேண்டுபவர்கள், இந்த ஸ்ரீ சக்ரம் உள்ள பாறையில் நேர் எதிரில் நின்று தியானம் செய்தால் குணம் ஏற்படுகிறது.

இங்குள்ள தியான மண்டபத்தில் சில மணி நேரம் அமர்ந்து தியானம் செய்து நினைத்தது நினைத்தபடி பெற முடியும் என்பதை அவரவர்கள் அனுபவத்தில் உணரலாம்.

சித்தர் பெருமக்களால் உருவாக்கப்பட்ட மூலிகை ஊற்றுநீர், இன்றும் வற்றாத மூலிகை நீராக மக்களின் நோய்களைத் தீர்த்துக் கொண்டுள்ளது. சப்தசாகரம் என்றழைக்கப்படும் ஏழுவிதமான மூலிகைகள் கலந்த சுனைகள், தோல் நோய்கள், நுரையீரல் பாதிப்பு போன்ற நோய்களைப் போக்கும் ஆற்றலுடையதாக திகழ்கிறது.

ஆள் உயர பைரவர், அகத்தியர் உட்பட பதினெண் சித்தர்களும் வழிபட்ட இடம், ஸ்ரீசக்ரம், மூலிகை சுனை, மூலிகை வனம், மலை மீதமர்ந்த திருக்கோயில் என பல சிறப்புகளை கொண்ட இந்த ஊத்துமலை முருகன் கோயில் சேலம் மாவத்தில் சீலநாயக்கன் பட்டி என்ற ஊருக்கு அருகில் உள்ளது.

வாய்ப்பு கிடைக்கும் போது, அவசியம் இத் திருத்தலம் சென்று பயனடைய வேண்டும். மற்றவர்கள் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொண்டு ஒரு முறையாவது திருத்தல யாத்திரை செய்ய வேண்டும்.

சோதிட ரீதியாக இதயத்தில் ரத்த குழாய் அடைப்பு இருப்பவர்கள், வேல் மாறல் பாராயணம் செய்ய வேண்டும். வாய்ப்பு இல்லாதவர்கள் வேல் வகுப்பினை மட்டுமாவது படனம் செய்து பலன் பெற வேண்டும். இந்த தமிழ் பாடலை படனம் செய்து ஆபேரஷன் இல்லாமல் மீண்டு வந்த பலர் இங்கே

உண்டு என்பதை புரிந்து கொண்டு தமிழ் வழி, வழிபாடு செய்து பலன் பெற்று நிறைவுடன் வாழ இறைவன் திருமுன் வேண்டி வணங்குகிறோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 03 -

ஒரு திருக்கோயிலில் அம்பாள் சமேதராக ஒரு சிவலிங்க மூர்த்தம், இருக்கும் என்பதை பொதுவாக எல்லா சிவாலயங்களிலும் நாம் பார்த்து தரிசித்து மகிழ்ந்து இருப்போம்.

பல பிரசித்தி பெற்ற கோவில், திருமுறை பாடல் பெற்ற தலங்கள், வைப்பு தலங்கள் என எல்லா ஆலயங்களிலும் இப்படி தான் இருக்கும். ஆனால் இந்த வாரம் சிந்திக்க வரும் திருக்கோயிலில் இரண்டு சிவலிங்க மூர்த்திகள் இரண்டு அம்பாள் சன்னதிகள், என ஒரே திருக்கோயிலில் அமைந்து இருக்கிறது. இந்த வார பதிவில் இடம் பெறும் பாடல் பெற்ற நலம் தரும் திருத்தலம்.

அதுவும் சென்னைக்கு பக்கத்தில் என்றால், இவ்வளவு பக்கத்தில் இருந்து நம்மால் பார்க்க முடியவில்லையே என்ற ஏக்கமும் வருத்தமும் ஆன்மிக நாட்டம் உள்ளவர்களுக்கு வர தானே செய்யும்.

சரி அந்த திருக்கோயிலுக்கு வாசக அன்பர்களை இப்பதிவின் வழியே அழைத்து செல்வோம்.

சென்னைக்கு அடுத்த காஞ்சிபுரத்திலிருந்து, கலவை செல்லும் வழியில் 15வது கிலோமீட்டரில் உள்ளது திருப்பனங்காடு என்ற திருத்தலம். காஞ்சிபுரத்தில் இருந்து பேருந்து வசதி கொண்ட இந்த திருத்தலத்திற்கு, பேருந்து நிறுத்தத்தில் இருந்து கோவில் முகப்பு வரவேற்க சுமார், இரண்டு கிலோமீட்டர் சென்றால் திருக்கோயிலை அடையலாம்.

இந்த திருத்தலத்தின் திருமுறை பெயர் வன்பார்த்தான் திருப்பனையூர். இன்றயை நாளில் திருப்பனங்காடு என்று அழைக்கப்படுகிறது. தொண்டை நாட்டு திருத்தல வரிசையில் 9வது திருமுறைத் தலமாக அமைந்துள்ளது.

பனை மரத்தை திருத்தலமாக கொண்ட திருத்தலத்தில் இதுவும் ஒன்று. இந்த திருக்கோயிலில் எதிரில் உள்ள குளம் பெரியது சுமார் 200 அடி நீளம் உள்ள திருக்குளம். முழுவதும் தாமரை மலர்களால்

நிறைந்து உள்ளது. இத்தனை பெரிய தாமரை குளம் இங்கே இருப்பது ஆச்சரியமாகவும் மனதுக்கு நிம்மதியாகவும் இருக்கும்.

அஷ்டமத்து சனி, ஏழரை சனி அல்லது சனி திசை இது போல நடப்பவர்களுக்கு வரும் துன்பம் களைய இந்த திருக்கோயிலை தான் தேர்வு செய்வோம். இது போல சனியால் ஏற்பாடும் தொல்லைகள் குறைய, நிலையான மகிழ்ச்சி பொங்க உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடரின் ஆலோசனைப்படி இங்கே வழிபாடு செய்வது அவசியம்.

ராசி மண்டலத்தை கடக்க சனி பகவானுக்கு முப்பது ஆண்டுகள் ஆகிறது. இந்த கால கட்டத்தில் எல்லோருக்கும் ஜென்ம சனி, அஷ்டம சனி, அர்தாஷ்டம சனி அல்லது சனி திசை என ஏதாவது ஒரு பாதிப்பில் இருந்து சிக்காமல் தப்பமுடியாது

இந்த திருக்கோயிலில், சனி பகவான் தனியாக கோவிலுக்கு வெளியே இருப்பது ஒரு சிறப்பு அம்சம். அதுவும் வன்னி மரத்து விநாயகருக்கு நேர் பின்புறம் அமர்ந்த கோலத்தில் இருப்பது, சனியால் வரும் பிரச்னையை குறைத்து விடும் என்பதை சொல்லாமலே புரிந்து கொள்ள முடியும்.

வன்னி மரத்தின் நிழலில் வீற்றிருக்கும் விநாயகர் பின்புறம் உள்ள இந்த அம்சம் வேறு எந்த திருக்கோயிலிலும் காண முடியாது. விநாயகரை வலமாக சுற்றி வந்து வழிபாடு செய்யும் போது, அது சனிபாகவானுக்கும் சேர்த்து செய்வது போல அமைந்து விடுகிறது.

திருவன்பார்த்தான் பனங்காட்டூர் என்ற திருத்தல பெயர் கொண்ட இந்த திருத்தலத்தின் இறைவன் பெயர் தாலபுரீஸ்வரர் என்ற ஒரு மூர்த்தமும், கிருபநாதேஸ்வரர் என்ற ஒரு மூர்த்தமும் இரண்டு சிவலிங்க மூர்த்தங்கள், இரண்டு கொடி மரங்கள் மற்றும், அமிர்தவல்லி மற்றும் கிருபாநாயகி என்று தெற்கு பார்த்து அமைந்த இரண்டு அம்பாள் சன்னதியும் உண்டு.

பனை மர காடாக இருந்தமையால், இந்த பகுதி பனங்காடு (தால வனம்) என்று பெயர் பெற்றது. “பனங்காட்டிற்கும் வன்பாக்கத்திற்குமாய் இருப்பவன்” என்று சுந்தர மூர்த்தி சுவாமிகளிடம் இறைவன் அருளிப்பாடு செய்தமையால் இந்த திருத்தலத்திற்கு வன்பார்த்தான் பனங்காட்டூர் என்ற திருமுறை திருத்தல பெயர் அமைந்துள்ளது.

வன்பாக்கம் என்ற ஊர் இந்த திருத்தலத்திற்கு அருகே உள்ளது அது இப்போது வெம்பாக்கம் என்று அழைக்கப்படுகிறது. தற்போது இத்தலம், திருப்பனங்காடு என்ற பெயரில் விளங்குகிறது.

சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இறைவன் கட்டமுது (உணவளித்த) வரலாறு இத் தலத்தின் சிறப்பாக சொல்லப்படுகிறது. அகத்தியர் பூஜித்த தாலபுரீஸ்வரர் என்ற லிங்க திருமேனியும், அகத்தியரின் சீடரான புலத்தியர் தாம் பூஜித்த கிருபாநாதேஸ்வரர் என்ற லிங்க திருமேனியையும் இங்கே காண முடிகிறது. இந்த திருக்கோவிலை புதுப்பித்து கட்டிய தேவகோட்டை ஏகப்ப செட்டியார் திருவுருவ சிலையும் இத் திருக்கோவிலில் அமைந்துள்ளது.

பனை மரத்தை ஸ்தல மரமாக கொண்ட இந்த திருத்தலத்தில் பனம்பழம் நிவேதனமாக படைக்கப்படுகிறது. தென் திசை வந்த அகத்தியர் பெருமான் இந்த திருத்தலத்திற்கு வருகையில், முனீஸ்வரர் அடையாளம் காட்டிய லிங்க திருமேனியை வழிபாட்டு அபிஷேக ஆராதனை செய்ய இறைவனார் ஏற்படுத்தி தந்த திருக்குளத்தில் அபிடேக ஆராதனை செய்து நிவேதனத்திற்கு பழம் கிடைக்குமா என எதிர்பார்த்த நிலையில் இறைவனார் பனம்பழத்தை உதிர்த்தார். அந்த பனம்பழமே நிவேதனமாக படைத்து அகத்தியர் வழிபட்டார்.

இன்றும் கூட குழந்தை பாக்கியம் வேண்டுவோர் இங்கே பனம்பழம் படைத்து அதை உண்டு குழந்தை பேறு பெற்று விளங்குகின்றனர்.

சனிபகவானால் பாதிப்பு உள்ளவர்கள் குழந்தைப் பேறு வேண்டுபவர்கள் அவசியம் இந்த நலம் தரும் திருத்தலத்தை வழிபட்டு வணங்கி, வாழ்வில் நலமும் நிலைத்த மகிழ்ச்சியும் பெற்று உயர வேண்டும் என்று பிரார்த்தனை செய்கிறோம்.

இது போன்ற பாதிப்பு எதுவும் இல்லாதவர்களும், வாழ்வில் ஒரு முறையாவது இது போன்ற அதிசயம் நிறைந்த திருத்தலங்களை தரிசித்து, அவரவர்கள் நம்பிக்கைகுரிய சோதிடர்களின் ஆலோசனைப் படி வழிபாடு ஏற்றி வாழ்வில் நலம் பெற வேண்டுகிறோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 04 -

“குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம்” என்பது சொல்லடை.

ஆனாலும் பாருங்கள், வேறு எங்கும் காண முடியாதபடி இப்படி ஒரு முருகன் கோவில் என்றால், ஆச்சரியமாக தானே இருக்கும். மலை மீது ஏறி சென்று சுவாமி தரிசனம் செய்ய வேண்டும் என, பல மலைக் கோவில்களில் இப்போது சாலை வழி பாதை அமைத்து, கார், பஸ் போகும் படி செய்து இருக்கிறார்கள். ஆனால் இந்த திருக்கோயிலில் மலையில் கால்நடையாக மட்டும் தான் ஏறி செல்ல முடியும்.

மலை ஏற்ற பாதை செங்குத்தாக தான் இருக்கும். தமிழகத்திலேயே உயரமான மலையில் இருந்து அருள் பாலிக்கும் முருகன் கோவில் இது தான். இந்த மலையை ஏறி பழகி விட்டால், தமிழகத்தில் உள்ள எந்த மலைக் கோவில்களிலும் ஏறுவது சிரமம் இருக்காது என்று சொல்லக் கூடிய அளவில் உயரமான மலை. மலை ஏற்றம், சுமார் 1800 படிகளை கொண்டதாக, சற்று சிரமமாக இருந்தாலும் மலை ஏறும் போது, சுவாமி நம் பெயரை சொல்லி அழைக்கும் ஒலி கேட்கும் என்றால் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா.

இந்த கோவில் தினந்தோறும் திறந்து இருக்காது. சனி, ஞாயிறு மற்றும் கிருத்திகை நாட்களில் தான் திறந்து இருக்கும். சரி அப்படி ஒரு வித்தியாசமான கோவிலா என்று நீங்கள் யோசிக்கும் அந்த திருக்கோயில் ஓதிமலை தான்.

சுமார் 3 ஆயிரம் அடி உயரம் உள்ள இந்த மலை, கோயம்புத்தூர் மாவட்டத்தில், இரும்பறை என்ற கிராமத்தில் உள்ளது. இங்குள்ள சுவாமிக்கு ஓதியப்பர் என்று பெயர்.

படைக்கும் தொழிலை செய்து வந்த பிரம்ம தேவனுக்கு, பிரவணத்தின் பொருள் தெரியாமல் திகைக்க, அயனை தலையில் குட்டி, சிறையில் அடைத்து படைப்பு தொழிலை தாமே செய்ததாக புராணம் சொல்லும். சிறை என்பது அன்றைய நாளில் இரும்பு

அறையாக இருந்தது. அதனால் தான் மலைக்கு கீழ் பகுதி இன்றளவும் இரும்பறை என்ற பெயரில் உள்ளது. நடைமுறை பழக்கத்தில் மக்கள் இந்தபகுதியை இரும்பொறை என அழைக்கிறார்கள்.

இங்கு ஐந்து முகங்களும் எட்டு கரங்களும் கொண்ட திருமேனியுடன் முருகன் அருள்பாலித்துக் கொண்டு இருக்கிறார். உலகிலேயே வேறு எங்கும் இந்த அமைப்பு முறை இல்லை என்பதால், “ஆதி பிரம்ம ஸ்வரூபம்” என்று சொல்கிறார்கள்.

வேறு எந்த கோவிலிலும் இல்லாத வடிவமைப்பில் உள்ள இந்த கோவில் அடிப்பாகம் வட்ட வடிவத்திலும், கூம்பு வடிவத்தில் உச்சி பகுதியும் அமைந்துள்ள சிறுமுகை என்ற இடத்தில் அமைந்த வனப்பகுதி ஆகும்.

பதினெண் சித்தர்களில் போகர் இங்கே இருந்து முருகனை தரிசித்து வழிபட்டு வந்தார். இவர் வாழ்ந்த இந்த பகுதி பூதிக்காடு என அழைக்கப்படுகிறது. இங்குள்ள மண் வெள்ளை நிறத்தில் இருக்கும். விபூதிகாடு என்பது பூதி காடு என அழைக்கப்படுகிறது. விசேஷ நாட்களில் இந்த மண்ணே பிரசாதமாக வழங்குவார்கள்.

ஆறு முகத்தில் ஒரு முகம் போகர் முனிவருக்கு, பழனி மலைக்கு செல்ல வழி காட்ட ஆறு முகத்தில் ஒரு முகம் சென்றதால், இந்த திருத்தலத்தில் முருகனுக்கு ஐந்து முகம் தான். ஆறாவது முகம் அருகில் உள்ள குமாரபாளையத்தில் இருந்து அருள் பாலிக்கிறது என்று சொல்கிறார்கள்.

சுவாமி மலையில் பிரணவத்திற்கு பொருள் சொல்லி, வேத ஆகமங்களை இந்த மலையில் ஓதியதால், இது ஓதி மலை என்ற பெயருடன் இன்றும் பிரமாண்டமாக இருக்கிறது. இங்கு வள்ளி தெய்வானை கிடையாது.

இரவு நேரத்தில் விளக்குகள் இருப்பதில்லை என்பதால் மாலை நேரத்தில் மலை ஏறவோ, இரவு நேரத்தில் இறங்கவோ அனுமதி இல்லை.

இரும்பொறையில் இருந்து ஓதி மலை செல்ல பஸ் வசதிகளும் போதிய அளவில் இல்லை என்பதால், இந்த மலைக்கு செல்பவர்கள் முன்னேற்பாடாக பயணத்தை திட்டமிட்டுக் கொள்ள வேண்டும்.

அல்லது ஒரு வழிக்கு சுமார் நான்கு கிலோமீட்டர் நடை பயணமாக ஏற்றுக் கொள்ள தயார் படுத்திக் கொள்ள வேண்டும்.

திருக்கோவிலும் தினமும் திறந்து இருக்காது என்பதால், கோவில் அர்ச்சகரிடம் அலைபேசி வழியாக தொடர்பு கொண்டு வருகையை உறுதி செய்து கொள்வது நல்லது. சனி, ஞாயிறு, கிருத்திகை போன்ற நாட்களில் திறந்து இருக்கும் என்றாலும் ஒரு முறை உறுதி செய்து கொள்வது ஏமாற்றத்தை தவிர்க்க உதவும்.

மலைப்பாதையில் ஒரு லிங்க திருமேனியை வழிபட்டு மேலே சென்றால், சர்ப்ப கிரகங்கள் மட்டும் இருக்கும் தனியாக நவக்கிரகங்கள் இருக்காது. அதையும் தாண்டி மேலே படி ஏறி சென்றால் குரங்குகள் நிறைந்த பகுதி அதையும் கடந்து மேலே சென்றால் திருக்கோயிலை அடையலாம்.

போதிய அளவு தண்ணீர், சாப்பாட்டு தேவைக்கு பண்டங்கள் என வாங்கி எடுத்துச் செல்வது சிக்கல் இல்லாத பயணமாக இருக்கும்.

இந்த கோவிலுக்கு செல்ல நினைப்பவர்கள், போதிய போக்குவரத்து வசதிகள் செய்து கொண்டு செல்வது நல்லது இல்லை என்றால் நீண்ட தூரம் நடக்க வேண்டியது இருக்கும் என்பதை குறித்துக் கொண்டு, வருடத்திற்கு ஒரு முறையாவது தல யாத்திரை செய்து பழகுங்கள். இவ்வளவு கஷ்ட பட்டு இங்கே போக வேண்டுமா என நினைக்காமல் போக வேண்டும் என உறுதி எடுத்துக் கொண்டு (commit செய்து கொண்டு) உங்கள் பயணத்தை திட்டமிடுங்கள்.

புதியதாக ஒரு செயலை தொடங்கும் முன், தொழில் அபிவிருத்தி, என எந்த ஒரு செயலுக்கும் முன் இங்கே வந்து அனுமதி பெற்று செல்வார்கள். சிரசில் பூ வைத்து உத்திரவு வாங்குவார்கள்.

சோதிட ரீதியாக எதிரிகளால் தொல்லை, ஜாதகத்தில் காராகிரக வாசத்திற்கு வாய்ப்பு உள்ளவர்கள், வம்பு வழக்குகள் உள்ளவர்கள், எட்டாம் பாவகம் பழுது பட்டு இருப்பவர்கள் இந்த திருத்தல முருகனை வேண்டி பிரார்த்தனை செய்து கொள்வது நல்ல பலனை கொடுக்கும்.

எந்த பாதிப்புமே இல்லாதவர்கள் கூட அவசியம் இந்த திருத்தல முருக பெருமானை வருடத்திற்கு ஒரு முறையாவது வணங்கி

வழிபட்டு வந்தால், அந்த வருடத்து பிரச்சனைகள் மற்றும் சவால்களை சந்திக்கும் ஆற்றலும் சமயோசித அறிவும் சாதகமாக அமையும்.

கோவையில் இருந்து அன்னூர் வழியாக இருபொறை சென்று அங்கிருந்து ஓதிமலையை அடையலாம். வாய்ப்பு கிடைக்கட்டும் என காத்திருக்காமல், வாய்ப்பு ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு, ஓதிமலை ஆண்டவரை வழிபட்டு சகல நலன்களும் பெற்று வாழ வேண்டுகிறோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 05 -

மிகவும் புகழ்பெற்ற கோவில்கள் மட்டுமே சக்தி வாய்ந்த கோவில்கள் என்று நினைப்பது தவறு. அதுவும் இந்த தமிழகத்தில் மட்டும் தான் இருக்கிறது என சொல்வதும் முழுமையானது அல்ல.

எண்ணிக்கையில் வேண்டுமானால் தமிழகத்தில் அதிகமாக இருக்கலாம். ஆனால் இந்தியா மட்டுமல்ல உலகம் முழுவதும் சக்தி வாய்ந்த நலம் தரும் திருத்தலங்கள் இருக்கிறது. அதற்கு பின்னால் ஒரு வரலாறும் இருக்கிறது என்பதை புரிந்து கொள்வது நல்லது.

எல்லாம் சரிதாங்க ஐயா, ஆனால் பாருங்க, எங்க அப்பாவுக்கு கடவுள் நம்பிக்கை துளி அளவு கூட இல்லை. முன்னோர்களுக்கு கொடுக்க வேண்டிய திதியை கூட அவர் இதுவரை கொடுக்கவில்லை.

சோதிடர்களிடம் கேட்டால் பித்ரு தோஷம், பித்ரு சாபம் என சொல்றாங்க. குடும்பத்தில் பல பிரச்சனைகள். எடுத்ததெல்லாம் தடை. அறிவும் திறமையும் இருந்தும், நல்ல வாய்ப்பு கிடைப்பதில்லை. இதுவரை திருமணம் ஆகவில்லை. என சோக கதைகளை பட்டியலிட்டு கொண்டு இருப்பவர்கள் கொஞ்சம் இந்த பக்கம் திரும்பி கேளுங்கள்.

பித்ரு சாபம், பித்ரு தோஷம் இவைகள் எல்லாம் ஜாதகத்தில் சர்ப்ப கிரக நிலைகளை கொண்டு சொல்லி விடலாம். பொதுவாக ஆடி அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் திதி கொடுப்பது, திருவையாறு போன்ற இடங்களில் திதி கொடுப்பது போன்றவை விசேஷமானது தான்.

ஆடி அமாவாசை அன்று திருவையாறு விழா கோலம் காணும். அன்று அப்பருக்கு கயிலாய காட்சி கொடுத்த விழா ஐயாரப்பா என்று சத்தமிட்டால் எதிரொலிக்கும் சிறப்பு மிக்க அறம் வளர்த்த நாயகி உடனுறை ஐயாறப்பர் கோவிலில் நடக்கும். கயிலாயமே பூமிக்கு வந்தது போன்ற உணர்வு இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்களுக்கு கிடைக்கும். அது பற்றி இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்கலாம்.

ஒருவருடைய ஜாதகத்தில் பாக்கிய ஸ்தானம் என்பது 9-ம் இடம் என்பது சோதிட ஆர்வல அன்பர்களுக்கு தெரிந்து இருக்கும். இந்த பாக்கிய ஸ்தானமே முன்னோர்களைப் பற்றி கூறும் இடம்.

திரிகோணத்தில் சர்ப்ப கிரகம் அமைந்து இருத்தல் ஒளி கிரகமான சூரிய சந்திரன், இருள் கிரகமான ராகு கேதுவுடன் சம்பந்த பட்டு இருப்பது சர்ப்ப கிரக நட்சத்திர சாரத்தில் நிற்பது, 9ம் அதிபதி 9க்கு 12ம் இடமான எட்டாம் இடத்தில் மறைவது 8ம்மிட அதிபதியின் பார்வை பெறுவது அல்லது அந்த பாவகத்துடன் சம்பந்தப்படுவது அல்லது எட்டாம் பாவகாதிபதியின் சாரம் பெறுவது இப்படி ஒரு குட்டி பட்டியலே தர முடியும்.

அப்பா இவ்வளவு இருக்கிறதா என்று கேட்காதீர்கள்.. இதே போல 12ம் இடத்தை வைத்து சொல்ல ஒரு குட்டி பட்டியல் இருக்கிறது இன்னும் மாந்தியை வைத்து சொல்வதானால் நிறையவே இருக்கிறது என சொல்லும்படி பிரச்சனைக்குரியது இந்த பித்ரு தோஷம். அதுவும் இது போன்ற அமைப்புகளுடன் சனி சம்பந்தம் பெறும் போது தலை தலைமுறை தலைமுறையாக தொடரும் பித்ரு சாபம் இருக்கும்.

அப்பா.... கேட்பதற்கே இத்தனை பயமாக இருக்கிறதே தலை சுற்றுகிறதே. இந்த பித்ரு தோஷம் அல்லது பித்ரு சாபம். நிவர்த்திக்கு வழி ஏதும் இல்லையா என்று கேட்கும் அந்த உணர்வு படிக்கும் ஒவ்வொருவருக்கும் இருக்கும்.

அவர்களுக்காக தான் இந்த வாரம் இந்த திருத்தலத்தை, இந்த தொடரில் தருகிறோம். இந்த திருத்தலம் தமிழகத்தில் இல்லை. அதற்காக வருத்தம் கொள்ள தேவையில்லை. இந்த திருக்கோயில் சிறப்பை தெரிந்து கொள்வோம் வாய்ப்பு கிடைக்கும் போது, வாழ்வில் ஒரு முறையேனும் சென்று வருவோம்.

வடமொழியில், “தில்” என்றால் “எள்” என்பது நமக்கு தெரிந்து இருக்கும். முன்னோர்களுக்கு திதி கொடுக்கும் போது, எள்ளுடன் அரிசி தான் என்பது நமக்கு தெரிந்து இருக்கும்.

ஒரு எள் எத்தனை சிறியதாக இருக்கும் அந்த அளவிற்கு ஒரு வளர்ச்சி என்றால் எப்படி இருக்கும். ஆம் இந்த திருக்கோயிலில் இருக்கும் சிவலிங்கம் எள் அளவுக்கு ஆண்டுக்கு ஒரு முறை

வளர்கிறது என்றால் நமக்கு வியப்பாக தானே இருக்கும். அப்படியா?! அப்படியானால், இப்போ இத்தனை ஆண்டுகளில் எவ்வளவு பெரியதாக இருக்கும் என்ற கற்பனை உங்களுக்குள் ஓடிக் கொண்டு தான் இருக்கும்.

இந்த லிங்கம் பிரமாண்டமான உயரத்தில் இருக்கும். லிங்கத்தின் பானத்தை பார்க்க படி ஏறி தான் செல்ல வேண்டும் என்றால் நீங்களே எண்ணிப்பாருங்கள்.

இதை படிக்கும் போதே அங்கே போக வேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு வந்து இருக்கும். அந்த திருக்கோயில் தில் பாண்டேஸ்வர் என்ற திருநாமத்தில் இருக்கிறது. இது வாரணாசி நகரில் சோனபுரா .என்ற இடத்தில் இருக்கிறது.

பழமையான கோவில் தான் என்றாலும் இது சுயம்பு லிங்கம். ஒரு சில மணித் துளிகள் இங்கு அமர்ந்து தியானம் செய்தாலே அந்த vibe யை உணர முடியும்.பலநூறு வருடங்களாக வளர்ந்து கொண்டே இருக்கும் சிவனார், கல்லால் அமைந்த லிங்கம் தான் அதனால் தான் நமக்கும் ஆச்சரியம் நிறைந்ததாக இருக்கும்.

பஞ்ச பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டதாக சொல்லும் இந்த திருக்கோயில் வாசலில், எள், நல்லெண்ணை முதலியவற்றை அதற்குரிய விலை கொடுத்து வாங்கி கொண்டு ஆலயத்திற்கு சென்றால் கர்ப்பகிரகத்துள் ஒரு பெரிய பாத்திரம் நிறைய கங்கை நீர் வைத்து இருப்பார்கள்.

கையில் உள்ள எள்ளை அங்கே போட்டு அதன் பின்னர் கங்கை நீரால் அபிஷேகம் செய்ய வேண்டும். இவ்வாறு நாம் செய்ய கோவில் நிர்வாகம் எந்த கட்டணமும் வசூலிப்பதில்லை. அந்த கோவில் தியான மண்டபத்தில் உங்கள் வசதிக்கு ஏற்ப சில மணி நேரம் தியானம் செய்து விட்டு வர வேண்டும். அவ்வளவு தான். இந்த வழிபாட்டை யார் வேண்டுமானாலும் செய்யலாம். பெற்றோர் உள்ளவர்கள், இல்லாதவர்கள் என அனைவரும். இந்த வழிபாட்டை செய்யலாம்.

வழிபாடு தான் பரிகாரம் என பலமுறை சொல்லி இருக்கிறோம். அதன்படி அந்த வழிபாட்டு முறைகளை “அருள் தரும் அமாவாசை

வழிபாடு” என்ற புத்தகத்தில் தெளிவாக குறிப்பு தந்து உள்ளது. வாய்ப்பு கிடைக்கும் அன்பர்கள் அமேசானில் அதை வாங்கி பயன் பெறலாம்.

நமக்கு முந்தைய தலைமுறைகளின் ஆத்மாக்கள் நற்கதி பெறவும், நீர் நிலைகளில் தர்பணம் முதலிய புண்ணிய கர்மாக்களை செய்வது, தில ஹோமம் செய்வது போன்ற சில நடைமுறை வழக்கம் இருந்தாலும், இந்த தில் பாண்டேஸ்வரரை முறையாக வழிபட்டால் ஜாதகத்தில் சனி குறித்து காட்டும் பித்ரு சாபம், சர்ப்பங்கள் குறித்து காட்டும் தோஷம் முதலான அணைத்தும் விலகும். தோஷ நிவர்த்தி உறுதியாக கிடைக்கும்.

குறிப்பாக, வாரிசுகள் இல்லாதவர்கள், முன்னோர்களுக்கு திதி கொடுக்க முடியாதவர்கள் தில்பாண்டேஸ்வரருக்கு கங்கா ஜலம், எள் இரண்டையும் தூய மனதுடன் அர்ப்பணம் செய்து அவர்கள் சிவகதி அடைய பிரார்த்தனை செய்தால் போதும். நலமுடன் சுபிக்ஷம் உண்டாகும். சௌபாக்கியம் கிடைக்கும்.

இது தவிர, நீர் நிலைகளில், நாம் அறிந்தோ அறியாமலோ, செய்யும் தவறுகள் ஸ்ரார்த்தம் செய்து வைக்கும் புரோகிதர் செய்யும் தவறுகள், அந்த தவறுகளால் நமக்கு ஏற்படும் தோஷங்கள் என அனைத்தும் தில் பாண்டேஸ்வரரை வழிபடுவதால் நிவர்த்தி ஆகும்.

தோஷ நிவர்த்தி முறைகள் என சொல்ல தனியாக தொடரே எழுதலாம் என்றாலும் கிடைத்து இருக்கும் வாய்ப்பில் சுருக்கமாக இந்த அளவில் தெரிந்து கொள்வோம்.

இந்த காசி-வாரணாசி பயணத்தை முன்னதாகவே திட்டமிட்டுக் கொண்டு, உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடரின் ஆலோசனைப்படி, ஒரு நல்ல வழிகாட்டியுடன் வாழ்நாளில் ஒருமுறையேனும் சென்று வர வேண்டிய புண்ணியத் திருத்தலம் இது என்பதை மனத்தில் குறித்துக் கொண்டு இதுவரை போக வாய்ப்பு கிடைக்கவில்லை என்றாலும் இப்போது நிறைய போக்குவரத்து வசதிகள் வந்து விட்டமையால், சுலபமாக சென்று வரலாம் என தெரிந்து கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 06 -

- இன்றைய நாளில் குடும்பத்தில் ஒருத்தருக்காவது சர்க்கரை வியாதி இல்லாமல் இல்லை அது போல, சம்பாதிப்பவர்கள் ஏதாவது ஒரு வகையில் கடன் வாங்காமல் இருப்பதில்லை. சிலர் சம்பாதிக்கும் நாள் முழுவதும் EMI கட்டியே சோர்ந்து விடுவார்கள்.

நாம பாட்டுக்கு இருந்தால் கூட, கடன் வேண்டுமா? என கேட்டு தொலைபேசியில் விடாது துரத்தி எந்த டாக்குமெண்டும் தேவையில்லை என நமது ஆசைகளை தூண்டி, கடன் வாங்க வைத்து விடுவார்கள். அதை கட்டுவதற்குள் அப்பாடா.. போதும்.. போதும்... என ஆகிவிடும். இந்த கடனை எப்படிடா அடைப்பேன் என விழி பிதுங்க நின்று கொண்டு இருப்பவர்கள் ஏதாவது வழி கிடைக்காதா? யாராவது ஆலோசனை சொல்ல மாட்டாங்களா என்ற ஏக்கமும் இருக்கத் தான் செய்யும்.

இப்படி கடன் தொல்லையில் இருந்து வருந்துபவர்களுக்காக தான் இந்த வாரம் இந்த கோவிலை பரிந்துரை செய்கிறேன். இதற்கு இன்னொரு காரணமும் உண்டு.. இது போன்ற கடன் பிரச்சனை எனக்கு மட்டும் இல்லாமலா இருக்கும் என நினைக்கிறீர்கள். ஒரு சமயம் கடன் சுமை வருந்தும் நிலையில் இருக்கும் போது, எனக்கு கை கொடுத்தது இந்த திருத்தலம் தான் என்றால் வியப்பாக தான் இருக்கும்.

இந்த திருத்தலத்தின் சிறப்பை கேட்டால் ஆச்சரியமாக இருக்கும். கோவில் கூட சின்ன கோவில் தான். இருக்குமிடமும் சிறிய கிராமம் தான். அட ஒரு கிராமத்தில் இப்படி ஒரு அதிசயமா என்ற வியப்பில் தான் நானும் நுழைந்தேன்.

இந்த கோவில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள வேந்தன்பட்டி என்ற சிற்றூரில் உள்ளது, இந்த திருத்தலத்தில் சிவபெருமானை விட நந்திக்கு தான் பெருமை போல அதனால் நந்தியின் பெயரிலேயே கோவில் அமைத்து இருக்கிறார்கள்.

இது தேவார பாடல் பெற்ற திருத்தலம் அன்று எனினும் நகரத்தார்கள் இந்த கோவிலுக்கு நிறைய நற்பணிகள் செய்து இருக்கிறார்கள்.

இவ்வாலயத்தின் பிரதான தெய்வமாக மீனாட்சி அம்மன் சமேத சொக்கலிங்கேஸ்வரர் அருள்பாலிக்கிறார். இருப்பினும் இங்குள்ள நந்தியே சிறப்புக்குரியது என்பதால், நெய் நந்தீஸ்வரர் என்ற நந்தியின் பெயரிலேயே இவ்வாலயம் சிறப்பு பெற்று விளங்குகிறது.

இது பாண்டிய நாட்டுத் திருத்தலம் தான். ஒரு சமயம் இங்கு ஆட்சி செய்த பாண்டிய மன்னன், பிரதோஷ காலத்தில் கோவிலுக்கு போக முடியவில்லையே என்ற ஏக்கத்தில் ஒரு கோவிலை அமைத்து அங்கே மீனாட்சி சொக்கநாதரை பிரதிஷ்டை செய்து வழிபட்டு இருக்கலாம் என்று சொல்கிறார்கள்.

ஆலய வரலாறு முழுமையாக கிடைக்கப் பெறவில்லை என்றாலும் பழமையான மற்றும் பலன் தரும் திருக்கோயில் என்ற வரிசையில் அனுபவ வாயிலாகவே இதனை சொல்லலாம்.

தஞ்சை பெரிய கோவில் நந்தியும் இந்த திருக்கோவிலில் உள்ள நந்தியும் சம காலத்தியவை என்பதால் இந்த கோவில் நந்தியை தம்பி நந்தி என்று பாசமாக அழைக்கின்றனர்.

கடன் தொல்லை உள்ள "ரிஷப ராசி" அன்பர்கள் இந்த கோவிலில் நந்திஸ்வரருக்கு நெய் அபிஷேகம் செய்து, சுவாமிக்கு அர்ச்சனை செய்து பிரார்த்தனை செய்தால் கடன் தொல்லை தீரவழி பிறக்கும். கடன் சுமை சேராமல் இருக்கவும் தேவைக்கேற்ற வருமான வாய்ப்பிற்கும் வழி கிடைக்கும்.

இந்த கோவிலில் உள்ள நந்திக்கு செய்யப்படும் நெய் அபிஷேகத்தில்,. கீழே சிந்திய நெய்யை எறும்புகள் மொய்ப்பதில்லை. அபிஷேக நெய்யை வேறு எதற்கும் பயன்படுத்துவதில்லை. கோவிலில் உள்ள கிணற்றில் ஊற்றி வைத்து விடுகிறார்கள். நெய் கிணறு நிரம்புகிறது. திறந்த வெளியில் இருக்கும் நெய்யில் ஈ, எறும்பு துளிகூட வருவதில்லை என்றால் அதிசயமாக தானே இருக்கிறது இல்லையா.

வன்னி மரத்தை தல விருட்சமாக கொண்ட இந்த திருத்தலம், வேப்ப மர நிழலில் அமைந்து இருக்கிறது. சாதரணமாக சிவாலயங்களுக்கு சுவாமி மற்றும் அம்பாளுக்கு எடுத்துச் செல்லும் பூஜை மற்றும் அபிஷேக பொருட்களுடன், நந்திக்கு சிறப்பாக சுத்தமான பசு நெய் அபிஷேகத்திற்கும், அர்ச்சனை மற்றும் தனியாக பூ மாலை மற்றும் பூஜை பொருட்களை எடுத்துச் செல்ல வேண்டும். கோவில் அருகில் பெரிய கடைகள் எதுவும் இல்லை என்பதால் தேவையான பொருட்களை நாமே எடுத்துச் செல்வது நல்லது. அங்கே சென்ற பிறகு இது கிடைக்கவில்லையே என்ற வருத்தம் இல்லாது இருக்கும் இல்லையா

குறிப்பாக கடன் தொல்லையால் பாதிக்கப்படும் ரிஷப ராசி அன்பர்கள், வேறு எந்த தொல்லையாக இருந்தாலும் நந்திஸ்வரருக்கு நெய் அபிஷேகம் செய்து நந்தியின் இரண்டு கொம்புகளுக்கு இடையே உள்ள சக்கரத்தை தரிசித்து பிரார்த்தனை செய்து வந்தால் தீர்வும் தெளிவும் உறுதியாக கிடைக்கும்.

மதியம் 12 மணி வரை திறந்து இருக்கும் இந்த திருக்கோயில், மாலையில் 8 மணிவரையில் திறந்து இருக்கும். சிறிய ஊர் என்பதால், பஸ் வசதிகள், அங்கே கிடைக்கும் பொருட்கள் பஸ் வசதிகள் என நாமே திட்டமிட்டு எடுத்துச் செல்வது சிக்கலையும் மன வருத்தத்தையும் குறைக்கும்.

இந்த திருக்கோவிலில், சுவாமிக்கு இடது புறம் அன்னை மீனாட்சி அருள்பாலிக்கிறார். மாங்கல்யம் நிலைக்கவும் தன் கணவருக்கு ஏற்பட்ட தீராத உடல் நோய் நீங்கவும் இங்கே பிரார்த்தனை செய்து கொள்ளலாம்.

பிரகாரத்தில் விநாயகர், வள்ளி குஞ்சரி சமேத முருகப்பெருமான், தேவயானையுடன் அருள்பாளிக்கிறார். மகாலட்சுமி, பைரவர், நவக்கிரகங்கள் ஆகியோரும் சுற்று பிரகாரத்தில் வீற்றிருக்கிறார்கள்.

மற்ற சிவாலயங்களில் உள்ளது போல முக்கியமான விசேஷ நாட்கள் உண்டு என்றாலும் பிரதோஷம் பிரதானமகாவும், மிக விசேஷமாகம் உள்ளது.

அருள்மிகு மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்க பெருமான் அமைந்துள்ள நெய் நந்தீஸ்வரர் திருக்கோயில், புதுக்கோட்டைமாவட்டத்தில் வேந்தன்பட்டி என்ற சிற்றூரில் உள்ளது. இது பிள்ளையார்பட்டியில் இருந்து சுமார் 30 கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது,

கடன் மற்றும் பிரச்சனைகளுக்கு தீர்வு வேண்டுகிற ரிஷப ராசி அன்பர்கள் இந்த திருத்தலத்திற்கு சென்று வருவது நன்மை பயக்கும். ரிஷப ராசி அன்பர்கள் மட்டும் தான் செய்ய வேண்டுமா என கேட்காதீர்கள். எல்லோரும் செய்யலாம், எனினும், ருன ரோக சத்ரு ஸ்தானமாக சோதிடத்தில் சொல்லப்படும் 6ம் பாவகம் பழுது பட்டு இருக்கும் வெவ்வேறு ராசி அன்பர்களுக்கு வெவ்வேறு திருக்கோயில் வழிபாடு உண்டு. அதை வரும் வாரங்களில் சிந்தனைக்கு எடுத்துக் கொள்வோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 07 -

கோபமே வராது என்று சொல்வர்களுக்கு கூட கோபம் வரும் ஒரு கேள்வி என்ன தெரியுமா? "அறிவு இருக்குதா?" என்ற கேள்வி தான்.

அறிவு இருக்குதா என்று யாரிடமாவது கேட்டு பாருங்கள். அவர் கோபத்தின் உச்சிக்கே போய் விடுவார்கள். ஆனால் பலருக்கும் ஒரு துறையில் இருக்கும் அறிவு இன்னொரு துறையில் அது பற்றிய அறிவு இருக்காது என்பது தான் உண்மை

உதாரணமாக, ஒரு மிக சிறந்த மருத்துவருக்கு, சட்ட அறிவு இருக்காது. இது போல மற்ற துறைகளுக்கும். ஆக, ஒரு துறையில் அறிவு பெற்றவருக்கு இன்னொரு துறையில் அறிவு பொதுவாக இருக்காது இல்லையா. அப்புறம் ஏன் அறிவு இருக்குதா என்று கேட்டால் கோபம் வருகிறது என்று சிந்தித்து பாருங்கள்.

உடலில் உயிர் இருக்கிறது என்றால் அறிவு இருக்கிறது என்பது பொருள். அறிவு இருந்தால் தான் அது உயிர். உயிருக்கு விளக்கம் சொல்லும் போது, அறிவுடன், விருப்பம் மற்றும் செயல் இந்த மூன்றும் இருந்தால் மட்டுமே உயிர் என்பதை சொல்லுவோம். இந்த மூன்றில் ஒன்று இல்லை என்றாலும் அது உயிர் இல்லை. இது எல்லா உயிரினிங்களுக்கும் பொருந்தும்.

எனவே "அறிவு இருக்கிறதா?" என்றால் கோபம் வருவதற்கு காரணம், உயிர் இருக்கிறதா என கேட்பதை குறிப்பதால் தான் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

உயிரின் மீது தான் எத்தனை பயம். உயிர் பயத்தை காண்பித்து எத்தனை கொடுஞ்செயல் நடந்து கொண்டு இருக்கிறது என்பதை நாம் செய்தி தாள்களில் படித்து இருப்போம். உயிரின் சிறப்பை போற்றுவதற்கு தான் முதல் ஆண்டில் ஆயுஷ்ய ஹோமம் முதல் ஒவ்வொரு ஆண்டும் பிறந்த நாள் கொண்டாடுகிறார்கள். அறுபதை தொட்டவர்கள் கூட சஷ்டி அப்தி பூர்த்தி, சதாபிஷேகம், கனகாபிஷேகம் என கொண்டாடுகிறார்கள்.

பொதுவாக இது போல ஆயுள் விருத்திக்கு வழிபடும் திருத்தலம் திருக்கடையூர் என்பது நாம் தெரிந்து இருப்போம். காரணம் இங்கே தான்

மார்க்கண்டேயர் எமனை வென்று என்றும் பதினாறாய் இருந்தார் என்பது புராண வரலாறு.

நலம் தரும் திருத்தல வரிசையில், நாம் இந்த வாரம் சிந்திக்க எடுத்துக் கொள்ளும் திருத்தலம் இதுவல்ல. எமன் சாப விமோச்சனம் பெற்ற திருப்பைஞ்ஞீலி என்ற திருத்தலம்.

இது என்னங்க ஐயா, பெயரே படிக்க கஷ்டமாக இருக்கிறதே எந்த மாநிலத்தில் அல்லது எந்த நாட்டில் இருக்கிறது என கேட்டு விடாதீர்கள். இது தமிழ்நாட்டில், திருச்சி மாவட்டத்தில் தான் உள்ளது.

இந்த திருப்பைஞ்ஞீலி என்ற வாழைவன நாதர் திருக்கோவிலின் சிறப்பை பார்க்கலாம். இந்த கோவிலுக்கு போகும்போது வழக்கம் போல செல்வது போல கோவிலுக்குள் நுழையக் கூடாது. வெளி பிரஹாரத்தில், எமன் சன்னதி உள்ளது. அதை முதலில் தரிசனம் செய்து விட்டு, வலமாக வந்து கோவில் வாசலில் காலை கழுவி விட்டு பிறகு கோவிலுக்குள் செல்ல வேண்டும்.

எல்லா கோவில்களிலும் படியேறி மேல் நோக்கி செல்லும்படி இருக்கும். மாறாக இந்த திருக் கோயிலில் படியில் இறங்கி கீழ் நோக்கி செல்லும்படியாக அமைந்து இருக்கும்.

மார்க்கண்டேயருக்காக, திருக்கடையூரில் காலால் உதை பட்ட எமன், சிறை பட்டதால், மரணம் இன்றி ஜனனம் அதிகமாக, இழந்த எம பதவியை மீட்டு பெற்ற திருத்தலம் இந்த திருப்பைஞ்ஞீலி.

கோவிலில் ஸ்வாமி தரிசனம் செய்த பிறகு மீண்டும் கோவில் வெளிப்பிரகாரத்தை சுற்றி வர கூடாது என்பது இன்னொரு நியதி. எமனை வீட்டுக்கு அழைத்து வர கூடாது என்பதற்காக சொல்லப்பட்டு இருக்கலாம் என்பதை புரிந்து கொள்ள முடிகிறது.

இந்த கோவிலில் உள்ள இன்னொரு சிறப்பு இங்கு நவக்கிரகங்கள் கிடையாது. தனியாக நிற்கும் ஒரு கிரக சிலை கூட கிடையாது. ஒன்பது அணையா விளக்குகள் ஏற்றப்பட்டு அதுவே நவக்கிரகமாக பாவிக்கப்படுகிறது.

இந்த திருக்கோவிலில், உள்ள இன்னொரு சிறப்பு, எல்ல திருக் கோவிலிலும் உள்ள ஒரு ஸ்வாமி ஒரு அம்பாள் சன்னதி இருப்பது போல

அல்லாமல் ஒரு ஸ்வாமி இரண்டு அம்பாள் சன்னதி இருக்கிறது. ஸ்வாமியின் திருநாமம் ஞீலிவானேஸ்வரர் என்றும், அம்பாள் பெயர் விசாலாட்சி மற்றும் நீல் நெடுங்ககண்நாயகி என்றும் திருநாமம் தாங்கி அருள்பாளிகிறார்கள்.

சுவேதகிரி என்று அழைக்கப்படுகிற, தென்கயிலாயம் என்று போற்றப்படும் இந்த திருத்தலத்தில், சப்த கன்னிகள் தவம் இயற்றி மண வாழ்வு பெற்றமையால், இது தார தோஷம் போக்கி மன வாழ்வு தரும் தலமாக சொல்லப்பட்டாலும், எமதர்மன், இழந்த பதவியை மீண்டும் பெற்ற திருப்பைஞ்ஞீலி திருத்தலம் தான் ஆயுள் விருத்திக்கு பரிகார தலமாக பரிந்துரை செய்யப்படுகிறது.

சோதிட ரீதியாக ஆயுள் நிலைப்பாடு, மரணத்தை சொல்லும் பாவகம் என 2,7,6,8 போன்ற பாவகங்கள் பாதிப்பு உள்ளவர்கள் இந்த திருத்தலத்தில், சங்கல்ப்பம் செய்து உரிய பரிகாரங்கள் செய்தால், நிவர்த்தி ஏற்படும், துர் மரணம், கூட்டு மரணம் போன்ற சம்பவங்களை குடும்பத்தில் சந்திக்காமல் இருக்கவும் சிறப்பு வழிபாடு செய்து பரிகாரங்கள் செய்து கொள்வது நல்லது

தினம் தினம் செல் போனை சார்ஜ் செய்வது போல, உயிரை சார்ஜ் செய்து கொள்ள, வாழ்வில் ஒரு முறையாவது இது போன்ற திருத்தல வழிபாடு நம்மை ஆரோக்கியமாக வைத்திருக்க உதவும். அதனால் தல யாத்திரை மேற்கொள்ளுங்கள் அது அவசியமான வாழ்வின் அங்கம்.

அப்பர் ஸ்வாமிகள், பல திருத்தல யாத்திரை செய்து இந்த திருத்தலத்திற்கு வருகையில் வழி தெரியாமல் பசியுடன் நிற்க, அவருக்கு பொதி சோறு கொடுத்து வழி காட்டிய இறைவன் இந்த திருத்தலத்தில் சோற்றுடை நாதர் என்ற திருநாமத்துடன் இருக்கிறார்.

ஒரு ஸ்வாமி சந்நிதி, இரண்டு அம்பாள் சன்னிதி, பங்குனி மற்றும் புரட்டாசி ஆகிய மாதங்களில் 3 நாட்கள் சூரிய ஒளி ஸ்வாமி மீது விழுவது, மூவர் பாடிய திருத்தல சிறப்பை பெற்றது, 5 பிரகாரங்கள், 7 தீர்த்தம் மற்றும் சப்த கன்னிகை வழிபாடு, எமன் சாப விமோச்சனம் பெற்று பதவியை மீட்டு பெற்றது, , ஒன்பது நவக்கிரம் இல்லாமல் திருவிளக்கை நவ கிரகமாக பாவிக்கும் வழிபாடு என சிறப்பு பெற்ற இந்த திருக்கோயில், திருச்சி மாவட்டத்தில், மணச்சநல்லூரில் இருந்து சுமார் 7 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.

திருமணத்தடை, தார தோஷம் உள்ளவர்கள், ஆயுள் விருத்திக்கு மற்றும் எம பயம் உள்ளவர்கள் குறிப்பாக, அலுவலகம் அல்லது அரசியலில் பதவி இழந்தவர்கள் இந்த திருத்தலத்தில் எமன் சன்னதியில் வழிபாடு செய்வது உறுதியான விரும்பிய பலனை தர வல்லது என்பதை அவரவர் அனுபவத்தில் உணரலாம். திருமணத் தடை பரிகாரத்திற்காக, இந்து மதத்தை சேராதவர்களும் இந்த திருத்தல வழிபாடு செய்கிறார்கள் என்பதை தெரிந்து கொள்வது அவசியம்.

இந்த வாழை வன நாதர் திருக்கோயில் காலை 6 மணி முதல் மதியம் 1 மணி வரையிலும், இரவில் 8 மணி வரையிலும் தினந்தோறும் வழிபாடு, தரிசனத்திற்கு திறந்து இருக்கும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 08 -

“ஐம்புலன் அறிவு அவசியம் நமது அனைவருக்கும்” என்பதை நாம் அறிந்து இருப்போம். ஐம்புலன் என்பது, கண், காது, மூக்கு, வாய், தொடு உணர்தல், என இதனை *“பொறி ஐந்தும் மதி மயங்கி”* என அப்பர் தேவாரத்தில் குறிப்பிடுவதை நாம் அறிந்து இருப்போம்.

இந்த ஐம்புலனில் முதலில் சொல்வது கண் தான். *“முகத்திரண்டு புண் உடையார்”* என திருவள்ளுவரும் கண்ணின் முக்கியத்துவத்தை சொல்லி இருக்கிறார்.

கண் மருத்துவத்திற்கு என்றே தனி மருத்துவ துறை உண்டு. opthalomist என கண் மருத்துவரை சொல்லுவாங்க.. பார்வை குறை என ஒன்று வந்து விட்டால், தாங்கிக் கொள்ளவே முடியாது. நரை திரை மூப்பு என சொல்லும் இதில் கண்ணில் உள்ள பார்வை குறை, வயதான காலத்தில் வரும் cataract, அதை பொறை என்று சொல்லுவார்கள்.

உடலில் எல்லா உறுப்பும் சிறு குழந்தை முதல் வளரும் போது, தானே வளர்ந்து விடும். ஆனால் கண்ணில் உள்ள கருவிழி வளராது. கண்களில் உள்ள ஐரிஸ் வைத்து ஒருவரின் குணத்தை கண்டு பிடித்து விட முடியும்.

கண்ணின் அமைப்பு எத்தனை டிகிரி கோணத்தில் அமைந்து இருக்கிறது என்பதை வைத்து அவரின் குணத்தை சொல்லி விட முடியும். இதனால் தான் திருமணத்திற்கு பெண் பார்க்க போகும் போது, முக லட்சணத்தை பார்த்து அந்த பெண்ணின் குணத்தை சொல்லி விடலாம் என்பது pottupori என்ற கலை. இது சாமுத்திர்காவின் ஒரு பகுதி தான்.

இதிலும் யாருக்குமே வரக்கூடாத குளுக்கோமா என்ற கண் நோய் வந்து விட்டால் கொஞ்சம் கொஞ்சமாக பார்வை இழப்பு வந்து முற்றிலும் பார்வையை மறைத்து விடும். எத்தனை அறிவியல் முன்னேற்றம் வந்தாலும், ரெட்டினா பாதிப்புக்கு யாரும் எதுவும் செய்ய முடியாது என நம்மில் எத்தனை பேருக்கு தெரிந்து இருக்கும் என நினைக்கிறீர்கள்.

கண்ணில் உள்ள நரம்புகள் (optic nerve) புடைத்து பெரிதாகி விட்டால் (edima) அந்த தொல்லையை சொல்லி முடியாது. இதில் பிரச்சனை இருக்கும் ஆனால் தெரியாது என சொல்வது போல சொல்லிக் கொண்டே போகலாம்.

இன்றைய நாளில், ரீல் போடுவது ஸ்டோரி போடுவது என கண்களை சிமிட்டாமல், செல்போன், டேப்லெட், கம்ப்யூட்டர் டிஜிடல் டிவி என மின் திரைகளை தொடர்ந்து பார்த்துக் கொண்டு இருப்பதால், கண்கள் சோர்வடைவது கண்களில் ஈர தன்மை இல்லாமல் உலர்ந்து விடுவது என நிறைய பிரச்சனைகளும், மருத்துவர்களின் விழிப்புணர்வும் வந்து கொண்டு இருந்தாலும் நம் மக்கள் பிரச்சனை வந்த பிறகு தான் இது பற்றி யோசிப்பார்கள்.

இது போன்ற கண்களில் உள்ள பிரச்சனைகளை தீர்ப்பதற்கு கடவுள் கருணை கண் முன்னே இருக்கிறது என்றால் ஆச்சரியமாக தானே இருக்கும். மருந்தை தரும் மருத்துவனும் மனதை திருத்தும் வள்ளி மணாளனும் ஒரு நேர் கோட்டில் நின்று துணை செய்தால், பிரச்சனை தீரும் என்பது ஒரு புறம் இருந்தாலும், பிரச்சனை வராமலிருக்க, இறை வழிபாடு செய்து இறையருள் பெறுவது சாத்தியம் தானே.

ஆம் திருவாரூர் மாவட்டத்தில் உள்ளது “எண்கண்” என்ற திருத்தலம். என்னது கண் பார்வைக்கு என தனித்தலமா என யோசிக்கும்படி அமைந்துள்ளது இந்த திருக்கோயில். இது அடிப்படையில் பிரம்மபுரீஸ்வரர் என்ற சிவத்தலம் தான். ஆனாலும், இங்கே முருகனே பிரதானம். திருச்சி மாவட்டத்தில் உள்ள வயலூர் என்ற கிராமத்தில் உள்ள ஆதிபுரீஸ்வரர் திருக்கோவிலில் வயலூர் முருகன் எப்படி பிரசித்தி பெற்றதோ அப்படி தான் இந்த எண் கண் திருக்கோயில்.

முருகன் என்றாலே அழகு என்பது தமிழ் சொல்லும் பொருள். அந்த அழகுக்கு அழகு சேர்க்கும் விதமாக அமைந்துள்ளது எண்கண் திருக்கோவிலில் உள்ள முருகன் சிலை என்றால் கொஞ்சம் மனக் கண்ணில் பாருங்கள். முருகனே நேரில் வந்து பேசுவது போல உணர முடியும்.

மயில் மீது, அமர்ந்த கோலத்தில் இருந்து ஆறுமுகப் பெருமானாக அருள்பாலிக்கிறார். இந்த மயிலும் ஒற்றைக் காலில் முருக பெருமானை தாங்கி சுமந்தபடி சிலையை அமைத்து வடித்து இருக்கும் சிறப்பு சிற்பியின் திறமைக்கு ஒரு சான்று. இன்னும் சொல்ல வேண்டும்

என்றால் கை விரல்களுக்கு இடையே உள்ள இடைவெளியை கூட தத்ரூபமாக அமைத்து இருக்கும் இந்த சிலாரூபம் நம்மை ஒரு நிமிடம் மெய் சிலிர்க்க வைத்து விடும்.

முருக பெருமானுக்கு சிறப்பை சொல்லும் கிருத்திகை, அதை ஒட்டிய விரதம் வழிபாடு எல்லாம் சொல்ல இந்த திருக்கோவிலே முதன்மை பெறுகிறது. ஷண்முக அரச்சனை பிரார்த்தனையை தொடங்கி வேல் அர்ச்சனை செய்து முடித்தால், கண் பார்வை குறைபாடு நீங்கி முழுமையாக  குணமாகும் என்பது இந்த நூற்றாண்டில் நாம் கண் கூடாக பார்க்கும் அதிசயம் இந்த என் கண் திருக்கோயில்.

பிரணவ மந்திரத்திற்கு பொருள் தெரியாமல் பிரமனை சிறை பிடித்த முருகன், பிரணவ மந்திரம், வேத ஆகமங்களை சிவனாருக்கு ஓதியது போல, நான்முக நாயகன் பிரமன் இந்த திருத்தலத்தில் தவம் இயற்றி முருகப் பெருமானிடம் மந்திர உபதேசம் பெற்று பிரணவத்தின் பொருள் உணர்ந்து, நலம் பெற்றார் என சொல்லும் ஐதீகமும் இந்த திருத்தல சிறப்பில் சொல்வது உண்டு. அதனால் தான் முருகன் தென்திசை பார்த்து அருள்பாலிக்கிறார்.

வடக்கு சுவரில் பிரம்மாவும், நடராஜருக்கு எதிரே சனி பகவானும், உள்ள இந்த திருக்கோயில் ஒரு பிரகாரத்தை மட்டும் கொண்டு கிழக்கு மற்றும் தெற்கு என இரண்டு வாசல்  கொண்ட சின்ன கோவில் தான். ஆனால் இந்த திருத்தலம் தரும் பலன்கள் அளவிட முடியாதது. க்ஷேத்ர மகாத்மியத்தில் இந்த திருத்தலம் பற்றி சொல்லப்பட்டு இருக்கிறது. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் பாட பெற்ற திருத்தலமாகும்.

சிக்கல், எட்டுக்குடி, மற்றும் எண்கண் இந்த மூன்று திருத்தல முருகன் சிலையையும் ஒரே சிற்பியின் கைவண்ணத்தில் மலர்ந்தது என்பது இன்னொரு சிறப்பு . பார்வை இழந்த சிற்பி தன் மனக் கண்ணால் வடிவமைத்த சிலை என்ற சிறப்புடன், பங்குனி மாதத்தில் சூரிய கதிர்கள் பிர்ம்பபுரீச்வரர் மீது படுகிறது என்பது இன்னொரு சிறப்பு.

சோதிடப்படி லக்கினத்திற்கு 2-12 இல் ஒளிக்கிரங்கள் இருந்தால் அவர்களுக்கு கண் நோய் வரும். லக்கினம் பாப கர்த்தாரியாக இருந்தால் அவர்களுக்கு கண் தொடர்பான பிரச்சனை உண்டு. இதில் சனி பார்வையும் சேர்ந்து விட்டால் கேட்கவே வேண்டாம் என மருத்துவ சோதிடம்

சொன்னாலும், பார்வை வளம் பெற ஒரே தீர்வு எண்கண் முருகனே என்ற நம்பிக்கையுடன் வழிபாடு செய்யுங்கள்.

இன்றைய நாளில் கண்ணாடி அணிவது காண்டாக்ட் லென்ஸ் போடுவது என சர்வ சாதாரணமாகி விட்டாலும், அதிக நேரம் மின் திரையை பார்த்து கண் சோர்வு வருவது தவிர்க்க முடியாது என்பதால் ஆண்டுக்கு ஒரு முறையேனும் இந்த எண்கண் திருக்கோயிலுக்கு செல்ல வேண்டும் என உறுதி எடுத்துக் கொள்ளுங்கள். வேலை மற்றும் தொழில் நிமித்த பயணம் செய்பவர்கள் இந்த பகுதிக்கு வரும் போது, இந்த திருக்கோவில் செல்ல வேண்டும் என குறித்து வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த திருக்கோவில் திருவாரூரில் இருந்து 13 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது பஸ் வசதிகள் உள்ளது. பகல் 11 மணிவரை திறந்து இருக்கும் இந்த திருக்கோவில், தினமும் மாலை 4 மணி முதல் இரவு 8 மணிவரை திறந்து இருக்கும்.

திருத்தல யாத்திரை செய்வோம். திருவருளை பெறுவோம்.நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 09 -

திருவேடகம் என்பது மதுரைக்கு பக்கத்தில் உள்ள சோழ வந்தான் என்ற ஊருக்கு அருகில் உள்ள சிறிய கிராமம். இந்த ஊரில் உள்ள கோவில் அருளமிக ஏலவார் குழலி சமேத ஏடகநாத சுவாமி திருக்கோயில் தான் இந்த வார சிந்தனைக்கு எடுத்துக் கொள்ளும் திருத்தலம்.

இது 274 பாடல் பெற்ற சிவத் தலத்தில், சம்பந்த பெருமானால் பாடப்பெற்ற பாண்டிநாட்டு திருத்தலம்.இந்த தலத்தில் அப்படி என்னங்க அய்யா சிறப்பு. எப்போதும் திருக்கோயில் பெயரை கடைசியில் சொல்லுவீங்க.. இப்போ தொடக்கத்திலேயே சொல்லி இருக்கீங்களே என்று நீங்கள் கேட்க வருவது புரிகிறது.

வருடம் முழுவதும் திருவிழா கொண்டாட்டம் கொண்ட பழமையான திருக்கோயில் இது. தண்ணீர் ஓடும் திசையில் தான் தண்ணீரில் போட்ட பொருள் ஏதுவாக இருந்தாலும் செல்லும் என்பது பொதுவான அறிவியல் விதி. ஆனால் தண்ணீரில் இட்ட ஏடு ஆற்று நீரை எதிர்த்து சென்றது என்றால் ஆச்சரியமாக தானே இருக்கும். சம்பந்தர் அற்புதங்கள் என சொல்ல தொடங்கினால் தனியாக ஒரு தொடரே போட வேண்டும் என்றாலும், இந்த வார சிந்தனைக்கு எடுத்துக் கொண்ட இந்த திருத்தலத்தின் சிறப்புகளை பார்க்கலாம்

அனல் (நெருப்பு)வாதத்தில் தோற்ற சமணர்கள் சம்பந்த பெருமானை புனல் (நீர்) வாதிற்கு அழைத்தனர். அதை துணிச்சலாக ஏற்றுக் கொண்டு வெற்றி பெற்று சைவ சமயத்தை நிலை நிறுத்திய திருத்தலம் இந்த திருவேடகம். இந்த திருக்கோயிலின் சிறப்பை சொல்லி மாளாது. ஓடுகிற நீரில் இட்ட பொருள் எதுவாக இருந்தாலும், அது நீரின் ஓட்டத்திற்கே தான் போகும் இல்லையா. ஆனால் இந்த திருக்கோவில் அருகில் உள்ள வைகை ஆற்றில் இட்ட திருஞான சம்பந்தர் எழுதிய திருஏடு வைகை ஆற்று நீரிணை எதிர்த்து ஓடுகிறது என்றால் ஆச்சரியமாக தானே இருக்கும். அப்படி எதிர்த்து ஓடிய ஏட்டினை நிறுத்திய இடம் தான் இந்த திருத்தலம் அமைந்த இடம். சுவாமியின் பெயர் திரு ஏடகநாதர். அம்பாள் பெயர் ஏலவார் குழலி.

இந்த திருக்கோயில் லிங்க திருமேனி ஒரு சுயம்பு லிங்கம். அதன் உயரமும் அகலமும் பெரியது தான். ஒன்பது படிகளை ஏறி தான் கோவில் குருக்கள் சுவாமிக்கு ஆராதனை செய்வார். கீழிருந்து தான் நாம் தரிசனம் செய்ய வேண்டும்.

நவக்கிரகங்களினால், ஏற்படும் எந்த தொல்லையாக இருந்தாலும் நெருப்பில் இட்ட மெழுகு போல காணாமல் போயிடும் என்பதை உறுதியாக சொல்ல முடியும். பொதுவாக இந்த திருத்தலத்தில், முன்னோர் மோக்ஷமடைய சிறப்பு வழிபாடு, திருமணம் நடைபெறாதவர்கள், அம்பாள் சன்னதியில் திரு கழுத்து மாலையுடன் வலம் வந்த வரன் பெறுவது, வழக்கில் வெற்றி

பெற என பலவித வழிபாடுகள் இயல்பாகவே இந்த திருத்தலத்தில், நடை பெறுகிறது. மனத்தில் உள்ள இனம் புரியாத பயம் இயல்பாகவே இந்த திருக்கோயிலில் அடி எடுத்து வைத்த உடனேயே மறைந்து விடும் என்பது அவரவர்கள் அனுபவ உணர்வு. தமிழகத்தில் காசிக்கு இணையான முக்தி தலங்கள் என சில உண்டு. அவற்றுள் திருவேடகமும் உண்டு. இங்கு மும்மூர்திகளையும் வழிபட்ட புண்ணியம் இந்த ஒரு திருக்கோயில் வழிப்பாத்தில் கிடைக்கு என்பது சிறப்புக்குறியது. எல்லா நதிகளும் கடலில் சென்று கலக்கும். ஆனால் கடலில் சென்று கலக்காத ஒரே நதி தெற்கு வடக்காக ஓடும் வைகை தான் என்பது தமிழக மக்களுக்கு தெரிந்து இருக்கும்.

சித்திரை மாத பிறப்பு, வைகாசி விசாகம், ஆனி உத்திரத்தில் நடராஜர் அபிஷேகம், ஆடி பூரம், ஆவணி பவுர்ணமியில் ஏடு எதிர் ஏறிய உற்சவம் ஐப்பசியில் சூரசம்ஹாரம், கார்த்திகையில் தீப திருவிழா, மார்கழியில் ஆருத்ரா தரிசனம், தை மகத்தில் தெப்ப திருவிழா. மாசியில் சிவராத்திரி, பங்குனியில் உத்திரம் என ஆண்டு முழுவதும் திருவிழா காணும் இந்த திருக்கோயிலில் உள்ள திருஏடகபெருமான், பத்திரகா பரமேஸ்வரர் என்ற திருப்பெயரில் அன்புடன் அழைக்கப்படுகிறார். ஸ்வாமிகக்கு எதிரில் உள்ள நந்தி உயரமான மேடையில் அமர்ந்து இருக்கும். அம்பாள் சன்னதி தனியாக சுவாமிக்கு வலது புறம் இருக்கும்.

இங்கு அம்மை நின்ற திருக்கோலத்தில் காட்சி அருள்கிறார். நான்கு திருக்கரங்களில் இரண்டில் அபயமும் வரமும் தாங்கி

அருள்பாலிக்கிறார். இங்கு அம்மையை வேண்டிக்கொண்டால் திருமண வரம் உறுதியாக கிடைக்கும் என்கிறார்கள். திருமணம் ஆகாத 90 கிட்ஸ் இதனை பயன்படுத்திக் கொள்ளலாம்.

கோஷ்டத்தில் இச்சா, கிரியா மற்றும் ஞான சக்திகள் அமைந்து ஆட்சி அருள் புரிகின்றனர். பிராகாரத்தின் வடக்குச் சுற்றில் பள்ளியறை. தனி மண்டபத்தில் சண்டேஸ்வரி தேவி சந்நிதி கொண்டு அருள்கிறார். அம்மன் சந்நிதித் தூண்கள் ஒன்றில் திருஞான சம்பந்தக் குழந்தையின் திருவுருவம் சிற்பமாக உள்ளது. சின் முத்திரையுடன், தலையில் மாலை சூடி, கைத்தாளம் இல்லாமல் ஞானசம்பந்தரின் அழகு மனதைக் கொள்ளைகொள்வதாக அமைகிறது.

காசியில் நான்காம் கால சிவராத்திரி பூஜை பைரவருக்கு நடத்தப்படுவது போல ஏடகநாத ஸ்வாமி திருக்கோயிலிலும் நடைபெறும். இந்த பைரவர் பூஜையை காண்பவர்கள் அஸ்வமேதை யாகம் செய்த பலனை பெறுவார்கள் என்பது ஐதீகம்.

பிரஹாரத்தில் உயரமான நால்வர் திருமேனி சன்னதியும், அறுபத்து மூன்று நாயன்மார்களும், இந்த திருக்கோயில் நிகழவுக்கு காரணமாக இருந்த மங்கையற்கரசியார் திருமேனியும், வலமாக வரும் பகுதியில் வள்ளி தெய்வயானையுடன் நின்ற திருக்கோலத்தில் அருள்பாலிக்கும் திரு முருகன் திருமேனியும், சப்த மாதர்கள், திருஉருவ சிலையும், இருப்பது நம்மை தெய்வீக உணரவிற்கு அழைத்து செல்லும் என்பதில் ஐயம் இல்லை.

பாம்பன் ஸ்வாமிகள் திருமேனி சிலை இந்த திருக்கோயிலில் இருப்பது இன்னொரு சிறப்பு. பாம்பன் ஸ்வாமிகள் திருமேனி சிலை எந்த திருக்கோவிலில் இருந்தாலும் அந்த திருக்கோவில் புண்ணியத்தை அள்ளி தரும் சிறப்பு பெற்றவை என்பதை சொல்லி தெரிய வேண்டியது இல்லை.

திருப்பாசுரம் என்று அழக்கப்படும், “வாழ்க அந்தணர்” என்ற திருப்பதிகத்தை எழுதி வைகை ஆற்றில் விட்ட ஏட்டினை துதிக்கையில் தாங்கி, கரை சேர்த்த காரணத்தால், இங்குள்ள விநாயகர் “வாதில் வென்ற விநாயகர்” என அழக்கப்படுகிறார். இந்த விநாயகர் சன்னதி தனியாக கோவிலுக்கு வெளியே இருக்கிறது. திருஞான

சம்பந்தர் சிலையும் கோவிலுக்கு வெளியே வைகை கரையில் தனிக் கோவிலாக உள்ளது.

காலை 7 மணி முதல் திறந்து இருக்கும் இந்த திருக்கோயில் மதுரைக்கு அருகில் உள்ள சோழ வந்தான் என்ற ஊருக்கு அருகில் அமைந்த சிறிய கிராமம். மதுரை பெரியார் பேருந்து நிலையத்தில் இருந்து பஸ் வசதிகள் உண்டு.

வாய்ப்பு கிடைக்கும் அன்பர்கள் விடாமல் இந்த திருத்தல தரிசனம் செய்து முயற்சியில் ஏற்படும் தடைகள் நீங்கி, தடையற்ற முன்னேற்றம் பெற வாழத்துகிறோம்

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 10 -

வாரம் ஒரு திருத்தலம் என தொடர் பதிவு தருகிறீர்கள். மகிழ்ச்சி. ஆனால் பாருங்கள் எங்களுக்கு ஒரு சந்தேகம் என தொடங்கினார் ஒரு அன்பர்.

இந்த பிரச்சனைக்கு இந்த திருத்தலம் என சொல்றீங்க நல்ல விஷயம் தான். ஆனால் அதே திருக்கோயில் எங்கள் வீட்டுக்கு அருகில் அல்லது ஊருக்கு அருகில் இருக்கிறதே.. அங்கே சென்று செய்ய வேண்டிய கிரியைகளை செய்தால் போதாதா... அந்த குறிப்பிட்டு சொல்லும் திருத்தலத்திற்கு தான் செல்ல வேண்டுமா? என கேட்டு முடித்ததும்,

இது வழக்கமான திரும்ப திரும்ப கேட்கும் கேள்வி தானே என்று ஒதுக்காமல் அது பற்றிய விளக்கத்தை தரலாம் என்று இந்த வார சிந்தனையை தொடரலாம்.

பசு உடம்பில் பால் இருந்தாலும் மடியில் கறந்தால் தான் பால் கிடைக்கும் என்பது போல, இறைவன் எல்லா இடத்திலும் இருந்தாலும், இந்த வழிபாட்டுத் தலம் இதற்கு தான் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.. “எந்த கோவிலுக்கு போனாலும் எல்லா சாமியும் ஒன்னு தான்... எந்த வீட்டுக்கு போனாலும் எல்லா தாயும் ஒன்னு தான்..” என்று சினிமா வசனம் பேசுவதால் பயனில்லை.

அரிசி ஒன்று தான் அதில் செய்யக் கூடிய பலகாரங்கள் ஒவ்வொன்றும் வேறானவை வித்தியாசமான சுவையானவை அல்லவா. எல்லோருக்கும் பிரச்சனை உண்டு.. ஆனால் எல்லாமே ஒரே மாதிரி இருப்பதிலை என்பது போல, இதை இப்படி தான் செய்ய வேண்டும் என்பதால் அதை அப்படியே செய்தாக வேண்டும். மாற்றி செய்தால் பலன் கிடைக்காதா என்பதை விட நாம் விரும்பும் சுவை கிடைக்காது என்பது தான் உண்மை.

ஒரு “கைரேகை கலைஞன்” என்ற முறையில், இந்த குறிப்பை இங்கே பதிவு செய்கிறேன். உங்கள் கையில் உள்ள ரேகை அமைப்பு உலகம் முழுவதும் உள்ள பல கோடி மக்களில் உள்ள

இன்னொருவருக்கு ஒரே மாதிரி சர்வ நிச்சயமாக இருக்காது. அது தான் விதி.

இன்னும் தெளிவாக சொல்ல வேண்டும் என்றால், ஒருவருக்கே ஒரு விரலில் உள்ள ரேகை அமைப்பு இன்னொரு விரலில் இருக்காது. அதனால் தான் ஒரு சமயத்தில் ஒரு மாதிரி இருப்பவர் இன்னொரு சமயத்தில் வேறு ஒரு மாதிரி இருப்பார்.

தலைவிதி பல புள்ளிகளாக கைகளில் பதிந்து இருக்கும். பல புள்ளிகளாக அமைந்த கோடுகளை தான் ரேகை என்று சொல்கிறோம். அதை படித்து சொல்வது தான் “கைரேகை கலை”. இந்த கைரேகைக் கலையில் சொல்லப் படும் பலன்களும், ஜாதகத்தை பார்த்து சொல்லப்படும் சோதிட பலன்களும் அநேகமாக ஒரே மாதிரியே இருக்கும் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

சூரியனை மையமாக வைத்து இயங்கும் இந்த கோள் மண்டலத்தில், புதனும், சுக்கிரனும், அருகருகே அமைந்து இருக்கும் என சோதிட ஆர்வலர்களுக்கு தெரிந்து இருக்கும். இதை நடைமுறையில், உங்கள் வீட்டில் இருந்து இதை வைத்து சிந்தித்து பார்த்தால், இதை இன்னும் தெளிவாக புரிந்து கொள்ள முடியும்.

வரவேற்பறை என்று சொல்லக் கூடிய ஹால், புதன், அங்கே அலங்காரத்திற்காக வைக்கப்படும் பொருட்கள் சுக்கிரன் இவை தொடர்பு பற்றி வருகிறதா? இதே போல சுண்டு விரலுக்கு கீழ் பகுதி புதன் மேடு, அதன் எதிரில், பெருவிரலுக்கு கீழ் பகுதி சுக்கிர மேடு இப்படி ஒன்றை ஒன்று தொடர்பான நிகழ்வுகள் இருக்கும். இதே போல பல உதாரணங்களை அடுக்கி கொண்டே போகலாம்.

இது தான் சோதிடம் இது தான் சாஸ்திரம் என தெரியாமல், பலரும், அதை தெரிந்தோ தெரியாமலோ சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள் என்பது தான் உண்மை. இன்னும் வளரும் தலைமுறைகளில் சிலர், தாமாகவே இதற்கு இது தான் பொருள் இது தான் காரணம் என்று தங்கள் கற்பனைக்கு/கருத்துக்கு ஏற்ப சொல்லி அடுத்த தலைமுறைகளின் அறிவை செயல்படாமல்/சிந்திக்கவிடாமல் செய்து விடுகிறார்கள், அந்த வாய்ப்பை பயன்படுத்தி தங்கள் தவறான கருத்தை திணித்து விடுகிறார்கள் என்பது தான் வெளிப்படையான வருத்தமான உண்மை. இது போன்ற நபர்களிடம் இருந்து

எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்ற தெளிவு நாம் ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும்.

சரி..! சரியானதை சரியாக புரிந்து கொண்டோம். இனி இந்த வார திருத்தல சிறப்பு சொல்லுங்களேன் என நீங்கள் கேட்பது புரிகிறது. சோதிடம் படிப்பவர்கள், அல்லது சோதிட விஷய ஞானம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புபவர்கள் எந்த கோவிலுக்கு செல்ல வேண்டும் அல்லது என்ன செய்ய வேண்டும் என்று சொல்கிறேன், குறித்துக் கொண்டு சரியாக உள்ளதா சொல்லுங்கள்.

ஜோதிட ஞானம் கைவர பெற வேண்டும் என விரும்புபவர்கள் விருட்ச வழிபாடு செய்ய வேண்டும்.. இந்த திருத்தல தொடர் நிறைவடைந்த உடன் தனியாக விருட்ச வழிபாடு பற்றிய சிந்தனையை தொடராக எடுத்துக் கொள்வோம். விருட்சம் என்பது மரங்கள் என்பது அன்பர்களுக்கு தெரிந்து இருக்கும் என உறுதியாக நம்புகிறோம்.

அதனால் தான் ஒவ்வொரு மரத்தில் இருந்து ஒடிக்கப்பட்ட ஒரே அளவுள்ள குச்சிகளை ஹோம சமித்தாக வைத்து வழிபாடு இயற்றுவது தொன்று தொட்டு இன்றும் நடை முறையில் உள்ளது. அதிலும் ஒவ்வொரு சமித்து குச்சிகளுக்கும் ஒவ்வொருவிதமான பலன்கள் உண்டு. எந்த ராசிக் காரர்களுக்கு எந்த ஹோமத்திற்கு எந்த பலனை எதிர்பார்த்து செய்தல் என ஒவ்வொரு நிகழ்வுகளை தெளிவாக படித்து பரிந்துரை சொல்ல வேண்டும்.

இதில் மாற்றிச் செய்தால் கிடைக்க வேண்டிய பலன் கிடைக்காமல் போவதுடன், வேறு மாதிரி அமைந்து விடவும் வாய்ப்பு உள்ளது. பாயசம் செய்யும் போது, அதில் மஞ்சள் பொடி அல்லது உப்பு போட்டால் என்ன கிடைக்கும் என்பது போல என சிந்தித்து பார்த்தால் சொல்ல வருவது சொல்லாமலே புரியும்.

சோதிட ஞானம் பெற விரும்பும் அன்பர்கள் மரங்களில் ராஜாவான அரச மரத்தை வழிபாடு செய்ய வேண்டும். இது சில பழங்கால கோவில்களில் இருக்கும். எந்த கோவிலாக இருந்தாலும் சரி அங்குள்ள அரச மரத்தை காலை வேளையில் வலம் வந்து, நிவேதனம் படைத்து, வழிபாடு இயற்ற வேண்டும்.

என்னது மரத்திற்கு வழிபாடா, இது பகுத்தறிவுக்கு ஏற்புடையதாக இல்லையே என்று எண்ணி நகைக்க வேண்டாம். மரத்திற்கு உயிர் உண்டு. ஒரு சின்ன விதையில் அடைபட்ட மரம் கண் விழிப்பது போல எந்த மனிதனாலும், எந்த அறிவியலாலும் செய்ய முடியாது என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

இதை தான் முந்தைய காலத்தில், "அமாசோம" பிரதட்சணம் செய்வார்கள். அதாவது திங்கள்கிழமை வரும் அமாவாசை அன்று அரச பிரதட்சணம் (வலம் வருதல்) செய்து தானம் தருவார்கள். இது பற்றி சிந்திக்க நிறைய உள்ளது அதை வாய்ப்பு கிடைக்கும் போது சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 11 -

வழிபாட்டுத்திருத்தலம் என்ற உடன் நம்மை ஒரு நிமிடம் மெய் சிலிர்க்க செய்வது கேட்டதை கேட்டபடியே கேட்ட உடனே நிறைவேற்றி தரும் திருமுருக பெருமானின் திருத்தலம் தான் என்றால் மறுத்து சொல்ல யாரால் முடியும்?

அந்த வரிசையில் இந்த வாரம் நாம் சிந்திக்க எடுத்துக் கொள்ளும் திருத்தலம் ஒரு முருகன் திருத்தலம் தான். தினைப்புலம் காத்த வள்ளி தாயாரை மனம் புரிந்த திருத்தலம்.

பைசல் ஆகாமல் நிலுவையில் உள்ள வழக்கில் சாதகமான தீர்ப்பு கிடக்க இந்த திருத்தலம் தான் கை கொடுக்கும். தொழில் முறை வழக்கு இருப்பவர்கள் இந்த திருத்தலத்தில் வேல் அர்ச்சனை செய்து வேண்டியதை சுலபமாக பெற்றுச் செல்லலாம்.

இந்த தலத்திற்கு உள்ள சிறப்பு என்ன தெரியுமா? முருக பெருமானே அருணகிரி பெருமாளுக்கு உடன் வந்து வழிகாட்டிய திருத்தலம் ஆகும். வயலூரில் திருப்புகழை பாட வைத்த ஆறுமுக கடவுள் அருணகிரியை "விராலிமலைக்கு வா" என்று அசரீரி வாக்கு கொடுத்து சென்று விட்டார்.

விராலி மலைக்கு எப்படி செல்வது என்று தெரியாமல் திகைத்து நின்ற அருணகிரிநாதருக்கு, முருகனே வேடனாக உடன் வந்து வழிகாட்டிய திருத்தலம் தான் விராலிமலை. பதினாறு திருப்புகழ் பாடல் பாடப்பெற்ற அற்புதமான திருத்தலம் விராலிமலை. இந்த திருத்தலத்தில் தான் அருணகிரி பெருமானுக்கு அஷ்டமா சித்தியை தந்து அருளியதாக சொல்லுவார்கள்.

திருவண்ணாமலைக்கு இணையான திருத்தலம் என விராலிமலை போற்றப்பட இன்னொரு காரணம் இங்கு சித்தர் பெருமக்கள் தவம் செய்த மலை. சனற்குரார்களுக்கு முருக பெருமான் காட்சி தந்த திருத்தலம் இந்த விராலிமலை. நாரதர் சாப விமோச்சனம் பெற்ற திருத்தலம் என பெருமைக்கு பெருமை சேர்க்கும் திருத்தலமாக விளங்குவது விராலி மலை.

மயில்களின் சரணாலயம் என்று போற்றப்படுகிற விராலிமலை திருக்கோயில் திருச்சியில் இருந்து சுமார் 30 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருச்சி சத்திரம் பேருந்து நிலையத்தில் இருந்து பஸ் வசதிகள் உண்டு. வைகாசி விசாகம், தை பூசம், கந்தர் சஷ்டி என முருக பெருமானுக்கு உரிய எல்லா விசேஷ தினங்களும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

207 படிக்கற்கள் கொண்ட சின்ன மலை தான் என்றாலும், வழி நெடுகிலும், சோலைகளும், மயில்களும், சுனைகளையும் கொண்ட இந்த மலைத்தலத்தில் முனிவர்கள் மரங்களாக விரவி முருகனை வழிப்பட்டதால் விரவிமலை - விராலிமலை என அழைக்கப்படுவதாக சொல்லப்படுகிறது.

முத்துப் பழனி கவிராயர் எழுதிய குறவஞ்சி பாடல் திருவிழா காலங்களில் இங்கே நாடகமாக பாடப்படுகிறது என்பது தமிழ் கடவுள் அருள் பாலிக்கும் பழமையை பறை சாற்றுகிறது.

தமிழ் கடவுளான முருகன் திருத்தலத்தில் உள்ள மயிலின் அமைப்பை வைத்து அந்த தலத்து பரிகார குறிப்புகளை சொல்லி விடலாம் என்ற வகையில் இங்குள்ள மயில் தென் திசை நோக்கிய கூறிய பார்வையில் அமைந்து இருக்கும். இதனை “அசுர மயில்” என்று சொல்லுவார்கள். அதனால் தான் விரோதிகளால் ஏற்படும் தொல்லை, நிலுவையில் உள்ள வழக்கு சாதகமாக அமையவும் விரைவில் தீர்ப்பு கிடைக்கப் பெறவும், இங்கு வேல் அர்ச்சனை செய்து வேண்டுதலை பெற்றுக் கொள்ள முடியும்.

வேறு எந்த கோவில்களிலும் இல்லாத படி மூலவருக்கு எதிரில் நவக்கிரக சந்நிதிகள் இருக்கும். படி ஏறி செல்லும்படியான சிறிய மலை தான் என்றாலும் மலை ஏற முடியாதவர்களுக்காக சாலை வசதியும் உள்ளது.

வழக்கு, கடன், நோய் என பிரச்சனையில் மன உளைச்சலில் உள்ளவர்கள், சத்ரு சம்ஹார பதிகத்தையும், வேல்மாரல் பாராயணம், ஷண்முக கவசம் என அவரவர்கள் நம்பிக்கைக்குரிய ஜோதிடர் ஆலோசனைப்படி படனம் செய்து, வேல் அரச்சனை செய்து வேண்டியதை பெற்று மன நிறைவுடன் வாழ வாழ்த்துகிறோம். நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 12 -

பிரச்சனை இல்லாத வாழ்க்கையை தான் எல்லோரும் விரும்புகிறோம். ஆனால் பாருங்கள், பிரச்சனையை நாம் விரும்பாவிடிலும், பிரச்சனைகளுக்கு நாம் இல்லாமல் இருக்க முடியாது. அதனால் பிரச்சனைகளும் அதை எதிர்த்து துணிந்து நிற்கும் தன்னம்பிக்கையும் அமைந்து விட்டால், இறைவன் திருவருள் தானே அமைந்து விடும் என்பதில் ஏதேனும் சந்தேகம் இருக்கிறதா என்ன?

பணம் ஒரு வகையில் பிரச்சனை என்றாலும், உடல் ஆரோக்கியம் இன்னொரு வகையிலான பிரச்சனை. கை நிறைய உணவு எடுத்த சாப்பிட்டவர்கள் இன்று வேளைக்கு இத்தனை என மாத்திரை எடுத்துக் கொள்ளாமல் இருக்கிறார்களா என்ன? சர்க்கரை நோய் மட்டுமல்ல வயதான காலத்தில் வரும் மூட்டு வலி கூட இளம் வயது பிள்ளைகளுக்கு வந்து விடுகிறது.

இதில் குறிப்பிட்ட காலத்தில் பெண்கள் பருவம் எய்தவில்லை என்றாலும் பிரச்சனை தான், பருவம் வந்த பெண்களுக்கும் சரியான நேரத்தில் மாதவிடாய் இல்லை என்றாலும் அது தொடர்பான பிரச்சனைகளும் இல்லாமல் இல்லை. அதற்கு காரணம் மனம் சார்ந்த பிரச்சனை என்று உளவியலார் சொன்னாலும், முதிர் இளம் கன்னியர்களுக்கு வரும் மெனோபாஸ் இன்னொரு பிரச்சனை, இதன் விளைவாக மூட்டு வலி எலும்பு தேய்மானம், குதிகால் எலும்பு என பிரச்சனைகளை அடுக்கி கொண்டே போகலாம்.

நோய் எதிர்ப்பு சக்திக்கு மாத்திரை மருந்துகள் எடுத்துக் கொள்கிறோமோ இல்லையோ, நோய் தீர்வுக்கு பணத்தை தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டும் என்ற நிலையில் இருக்கும் இன்றைய நம்மவர்கள், இப்படி ஒரு சிக்கலை சந்திப்பார்கள் என்று அறிந்து தானோ இறைவன் நமக்காக, திருஅருள் புரிந்து வைத்து இருக்கிறார்.

திருச்சி மாவட்டத்தில், உத்தமர் கோவில் என்ற திவ்ய தேசம் தெரியாதவர்கள் இருக்க வாய்ப்பில்லை. இந்த திருத்தலத்திற்கு அருகே, முசிறி செல்லும் பாதையில் உள்ளது திருவாசி என்ற திருத்தலம்.

இந்த திருவாசி என்ற திருத்தலத்தின் தொன்மையான பெயர், திருப்பாச்சிலாச்சிராமம் என்பதாகும். இது தேவாரம் பாடல் கிடைக்கப்பெற்ற காவிரி வடகரை தலங்களில் 62 வது தலமாக சைவ அன்பர்களால், போற்றப் படுகிறது.

சிவனாரின் தோழமை கொண்டு சைவ பணியாற்றிய சுந்தரர் பொன் பெற்ற திருப்பதிகங்களில் ஒன்று இது. இது போல கோடீஸ்வரராக்கும் திருப்பதிகங்கள் என ஒரு தொகுப்பு உண்டு. அதனை தொகுத்து “வறுமை நீங்கி வளமை பெற…” என்ற தலைப்பில் புத்தகமாக அமேசானில் பதிப்பு செய்துள்ளேன். விருப்பம் உள்ளவர்கள் அதனை பதிவிறக்கம் செய்து பலன் பெறலாம்.

திருவாசி என்ற இந்த திருத்தலத்தில், கொல்லிமலைத் தொடரை எல்லையாக கொண்டு கொல்லி மழவன் என்ற சிற்றரசன் ஆண்டு வந்தான். அவனது மகளுக்கு தீராத வலிப்பு நோய் இருந்து குணமாகாமல் இருந்தது.

தல யாத்திரை சென்று வந்த திருஞானசம்பந்தர் இந்த திருத்தலத்தில் எழுந்து அருளிய சமயம், இதை அறிந்த மன்னன், தனது மகளின் நோயை நீக்கி அருள சம்பந்த பெருமானை வேண்டி நின்றான். திருப்பதிகம் பாடி சம்பந்த பெருமான் அந்த கொல்லி மழவனின் மகளின் நோயை தீர்த்து அருளினார் என்பது வரலாறு. இதன் அடிப்படையில், இங்குள்ள நடராஜர் காலுக்கு கீழே முயலகன் உருவம் இல்லாது இருக்கும் என்பதை அறிந்து கொள்வது அவசியம்.

இந்த திருத்தலத்தில், பெண்களுக்கு ஏற்படும் மாதவிடாய் பிரச்சனை தீரவும், மூட்டு வலி. வாத நோய் போன்றவை குணமடையவும் இந்த திருத்தலத்தில் வழிபாடு செய்ய நோய் நீங்கி ஆரோக்கியம் நிலைக்கும்.

கீழே காலை மடக்கி உட்கார முடியாத படி மூட்டு வலி பிரச்சனை, வேறு வழி இல்லை மூட்டு மாற்று ஆப்பரேஷன் செய்து கொள்ள வேண்டும் என டாக்டர் சொல்லி விட்டார் என்று பயப்பட வேண்டாம். சவ்வு கிழிந்து விட்டது போன்ற கடினமான பிரச்சனைகளாக இருந்தாலும், “திருவாசி” என்று இப்போது அழைக்கப்படும் திருப்பாச்சிலாச்சிராமம் என்ற இந்த திருத்தல பயணம் செய்து வன்னி இலை கொண்டு இறைவனை மனம் உருகி வழிபாடு, செய்தால்,

உறுதியான பலன் கிடைக்கும் என்பது இன்றும் நடைமுறையில் உள்ள கை மேல் பலன் தரும் திருத்தலம் இது என்றால் ஆச்சரியமாக தானே இருக்கிறது.

இங்குள்ள இறைவனின் பெயர் மாற்று உரை வரதர் என்பதாகும். வரதர் என்பது பெருமாளை குறித்து சொல்லும் பெயர் அல்லவா என்று யோசிக்க தேவையில்லை என்பதால் தான் உத்தமர் கோவிலை முன்பே கோடிட்டு காட்டியது.

இந்த திருத்தலத்திற்கு வந்த வன்தொண்டரான நம்பி ஆரூரன், இறைவனிடம் பொன் கேட்டு பெற்ற திருத்தலம். இங்கே சுவாமி சுந்தரருக்கு பொன் முடிப்பு தந்து அருளியதும், மாற்று உரைத்து, பொன்னின் தரத்தை சோதித்து பார்த்தமையால், இங்குள்ள இறைவனாருக்கு மாற்று உரை வரதர் என பெயர் என சொல்லுவார்கள்.

கடைசி சமயத்தில் கை நழுவி போகும் வாய்ப்புகள், அறிவும் திறமையும் இருந்தும் வாய்ப்புகள் கிடைக்காத அன்பர்கள், இங்குள்ள வன்னி மரத்தடியில் உடைத்த கடலை மாவினை “கிழி கொடுத்து அருளிய திருவாசல்” வழியாக வந்து வன்னி மரத்தடியில் எறும்புகள் சாப்பிடும் வகையில் பரவி போட்டு விட்டு வருதல், தடைகள் நீங்கி, பலன் தரும்.

வழக்கத்திற்கு மாறாக, இந்த திருத்தலத்தில், அர்த்த சாம பூஜையின் போது, முதலில் அம்பாளுக்கே முதல் பூஜை நடக்கும். இந்த திருக்கோயிலில் உள்ள நவக்கிரங்கள், அனைத்தும், தலைமை கிரகமான சூரியனை பார்த்து வணங்கி நின்றபடி அருள்பாலிக்கிறார்கள்.

சுயம்பு லிங்கமாக அருளும் இறைவனார், அருள்பாலிக்கும் இந்த திருக்கோயில் சுமார் 1500 ஆண்டுகள் பழமை வாய்ந்தது என்று சைவ அன்பர்களால், போற்றப் படுகிறது.

சோதிட ரீதியாக பாலாரிஷ்டம் உள்ள குழந்தைகளுக்கு அபிடேக தீர்த்தம் தெளித்து உள்ளுக்கு கொடுக்க நோய் தீரும் என்ற நம்பிக்கை உள்ளது.

காலை ஏழு மணி முதல் நண்பகல் வரை திறந்து இருக்கும் இந்த திருக்கோயில், மாலை 8 மணிவரையில் திறந்து இருக்கும். திருச்சியில் இருந்து முசிறி செல்லும் வழியில், சுமார் 15 கிலோமீட்டர் தொலைவில்

திருவாசி என்ற பேருந்து நிறுத்தத்தில் இறங்கி ஒரு கிலோமீட்டர் ஊருக்குள் நடந்து சென்றால் திருக்கோயிலை அடையலாம். திருச்சி சத்திரம் பேருந்து நிலையத்தில் இருந்து பஸ் வசதிகள் உள்ளது.

குறிப்பிட்டு சொன்ன பிரச்சனை உள்ளவர்கள் மட்டும் தான் இந்த திருக்கோவிலுக்கு செல்ல வேண்டும் என்று நினைக்காமல் இது போன்ற பிரச்சனைகள் வராமல் இருப்பதற்கும் வாய்ப்பு கிடைக்கும் போது, இந்த திருத்தலத்தை அடைந்து வழிபாடு செய்து பாலாம்பிகை சமேத மாற்றுரை வரதர் அருள் பெற வேண்டும் என்று அன்புடன் வேண்டுகிறோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# ஆசிரியரின்
## மக்கள் மனம் கவர்ந்த பிற நூல்கள்.







இந்த புத்தகங்களை, ஆன்லைனில்,

அமேசான், விக்கிமீடியா, மின் நூலகம் மற்றும் ஆடியோ புத்தகமாக Channel G podcastல் கேட்கலாம்.

இந்த புத்தக கட்டமைப்புக்கு
பணம் தந்து உதவலாம்.
இது இன்னும் புத்தகம் வெளிவர
ஊக்கம் அளிக்கும்.

# நூலாசிரியர் பற்றி…

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெய்யில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

